# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 62 | நவம்பர்—1982 | இதழ் 11


## பொருளடக்கம்



## சந்தாதாரருக்கு அறிவிப்பு

● ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயத்திலிருந்து அக்டோபர் மாதம் சந்தாதாரருக்கு அனுப்பப்பட்ட விஜயம் பிரதிகளில் சுமார் 70 பிரதிகள் எங்களுக்கே திரும்பிவந்து சேர்ந்தன. சில நாட்களுக்குப் பிறகு அதே சந்தா அன்பர்கள், தங்களுக்குப் பத்திரிகை வந்து சேரவில்லை என்று கடிதம் எழுதுகிருர்கள். தாங்கள் ஊரிலோ வீட்டிலோ இல்லாத சமயங்களில் இதழைப் பெற்றுத் தங்களிடம் சேர்ப்பிக்க ஏற்பாடு செய்துகொள்ளுங்கள்.

● ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் 12,000 பிரதிகள் தபாலில் சந்தாதாரர்களுக்கு அனுப்பப் படுகின்றன. இவற்றில் சில பிரதிகள் தபாலில் தவறிப்போகவும் கூடும். எனவே ஆங்கில மாதம் 10 தேதி வரையிலும் தங்களுக்குப் பத்திரிகை கிடைக்கப் பெருவிடில் தபாலாபீசில் விசாரிக்கவும்.

● புதிதாகச் சந்தா சேருபவருக்குக் காரியாலயத்திலிருந்து முதல் முறையாகப் பத்திரிகை அனுப்பப்படும்போது, முதல் மாதத்தில் பத்திரிகை கிடைப்பதில் தாமதம் ஏற்படக்கூடும்.

● புதிதாகச் சந்தா சேருபவருக்கு அந்த மாதத்தின் பிரதி கைவசம் இல்லையானுல், அதற்கடுத்த மாதம் முதல் பதிவு செய்துகொண்டு தொடர்ந்து ஒரு வருடத்திற்குரிய பத்திரிகை அனுப்பப்படும்.

● விலாச மாற்றம் இருக்குமானுல் உடனுக்குடன் எங்களுக்குத் தகவல் தெரிவியுங்கள். இல்லாவிடில் பழைய விலாசத்திற்கே பத்திரிகை சென்றுகொண்டிருக்கும். தங்களுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் விலாசத்தைச் சரி பார்த்துக் குறை இருப்பின் உடனடியாகப் பின்கோட்டுடன் தெரிவியுங்கள்.

### திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

# ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் ஊஞ்சல் சேவை

ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எல்லாக் குணங்களையும் அவஸ்தைகளையும் கடந்து விளங்குகிறார். அவர் அவற்றால் பாதிக்கப்படவில்லை; அவைகள் அவரைப் பாதிக்கவும் முடியாது. ஆனால், பக்தர்கள் அந்த ஒப்பற்ற பரம் பொருளைத் தங்கள் உள்ளத்திலேயே உணர்ந்து அனுபவிக்கிறார்கள். ஆகையால் பக்தர்கள், ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எப்போதும் உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் கவலையற்றும் இருந்து, தங்களுக்கு எல்லாவிதமான சௌகரியங்களையும் சௌபாக்கியங்களையும் க்ஷேமங்களையும் கொடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

இதுதான் திருமலையில் கண்ணாடி ஹால் எனப்படும் அயன மஹாலில் நாள்தோறும் நடத்தப்படும் ஊஞ்சல் சேவையின் தாத்பரியமாகும். இந்தச் சேவை ஒவ்வொரு நாளும் மாலையில் ஆறு மணிக்குப் பிறகு நடந்து வருகிறது. உற்சவ மூர்த்தி அழகாக அலங்கரிக்கப்பெற்ற ஊஞ்சலில் தம் தேவிமார்களுடன் எழுந்தருளுகிறார். கந்தம், சாமர உபசாரங்கள், வேதபாராயணம், பஜனை ஆகியவற்றுடன் ஸ்வாமி லேசாக ஊஞ்சல் ஆடுகிறார்.

மேற்கண்ட ஊஞ்சல் சேவை உற்சவத்தில் பங்குகொள்ள விரும்பும் கிருகஸ்தர்கள் ரூ. 1000 செலுத்தித் தங்கள் குடும்பத்தில் ஆறு பேர்களுடன் இந்த உற்சவத்தில் கலந்துகொள்ளலாம்.

எக்ஸிக்யூட்டிவ் ஆபீசர்,

**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்


ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்


தொகுதி 62 | துந்துபி ஞூ கார்த்திகை மீ | இதழ் 11


## பிரார்த்தனை



प्रसीद परदेवते मम हृदि प्रभूतं भयं
वितारय दरिद्रतां दलय देहि सर्वज्ञताम् ।
निधेहि करुणानिधे चरणपद्मयुग्मं स्वकं
निवारय जरामृती त्रिपुरसुन्दरि श्रीशिवे ।।

ப்ரஸீத பரதேவதே மம ஹ்ருதி ப்ரபூதம் பயம்
விதாரய தரித்ரதாம் தலய தேஹி ஸர்வஜ்ஞதாம் ।
நிதேஹி கருணாநிதே சரணபத்மயுக்மம் ஸ்வகம்
நிவாரய ஜராம்ருதீ த்ரிபுரஸுந்தரி ஸ்ரீசிவே ॥
—ஸ்ரீசக்திமஹிம்ந: ஸ்தோத்ரம்

பரதேவதையே! அருள் புரிவாயாக. என் உள்ளத்தில் இருக்கும் மிகப் பெரிய பயத்தைப் போக்கியருள்வாயாக. வறுமையை நீக்குவாயாக. அனைத்தையும் அறியும் சக்தியைக் கொடுத்தருள்வாயாக. கருணைக்கடலே! உன் திருவடித்தாமரைகள் இரண்டையும் என்னிடம் வைப்பாயாக. பரமசிவ பத்தினியான திரிபுரசுந்தரி! பிறப்பையும் இறப்பையும் நீக்கி அருள்வாயாக.

பாவலரும் நாவலரும் பண்மலரக் கண்மலரும்
காவலரும் ஏடவிழ்க்கும் காசியே,—தீவளரும்
கஞ்சக் கரத்தாள் கருணை விசாலாட்சி
அஞ்சக் கரத்தாள் அகம்.
—குமரகுருபரர்

# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள்வாக்கு



**சனிக்கிழமை, ஏப்ரல் 5, 1884**

ஸ்ரீராமகிருஷ்ணர் : வேதாந்தத்தின்படி பிரம்மமே சத்தியம் (வஸ்து), மற்றவை யாவும் மாயை (மித்யை) ஆகும். அவை அனைத்தும் கனவு போன்றன, உண்மைப் பொருள்கள் அல்ல (அவஸ்து).

அகங்காரம் ஒரு மரக் குச்சியைப் போல் சச்சிதானந்தக் கடலில் குறுக்கே விழுந்து கிடக்கிறது. (ம—வை நோக்கி) : நான் சொல்வதைக் கவனி. இந்த அகங்காரம் என்ற கழியை நீக்கி விடும்போது, ஏகமாய் அகண்டமாயுள்ள சச்சிதானந்தக் கடல் மட்டுமே உள்ளது. ஆனால் அகங்காரம் என்னும் மரக்குச்சி இருக்கும்வரையில் இரண்டு இருப்பதான தோற்றம் உண்டு. இந்தப் பக்கம் தண்ணீரின் ஒரு பாகமும், அந்தப் பக்கம் தண்ணீரின் இன்னொரு பாகமும் இருக்கின்றன. பிரம்மஞானம் பெற்றதும், ஒருவன் சமாதியில் நிலைக்கிறான். அப்போது இந்த அகங்காரம் அழிக்கப்படுகிறது.

ஆனால் சங்கராசாரியார் மக்களுக்குப் போதிக்கும்பொருட்டு உலக நன்மைக்காக 'ஞானியின் அகங்கார'த்தை வைத்திருந்தார்.* பிரான கிருஷ்ணரை நோக்கி): ஞானியை இன்னார் என்று குறித்துக் காட்டும் சில அடையாளங்கள் உள்ளன. தமக்கு ஞானம் இருப்பதாகச் சிலர் நினைக்கின்றனர். ஞானம் பெற்றிருப்பதற்கு அறிகுறிகள் எவை? ஞானி எவனுக்கும் தீங்கு (இம்சை) செய்ய முடியாதவனாவான். அவன் ஒரு குழந்தை போல் இருப்பான். இரும்பினால் செய்யப்பட்ட வாள் ஸ்பரிசவேதியைத் தீண்டி விட்டால், அது தங்கவாளாக மாறுகிறது. அந்தத் தங்க வாள் வெட்டுவதற்கு ஒருபோதும் பயன்படாது. வெளியே பார்ப்பதற்கு ஒரு ஞானியிடம் கோபம் இருப்பது போலவும், அகங்காரம் இருப்பது போலவும் மற்றவர்களுக்கு வேண்டுமானால் தோன்றலாம். ஆனால் உண்மையிலே அவனிடம் அதெல்லாம் ஒன்றுமே தங்கியிருக்காது.

தூரத்திலிருந்து பார்க்கும்போது, தரைமீது கிடக்கும் ஓர் எரிந்த கயிறு உண்மையான கயிற்றைப் போல் தோன்றலாம்; ஆனால், நீ அருகில் வந்து அதன் மீது ஊதினால் அது முற்றிலும் மறைந்துவிடுகிறது. ஞானியின் கோபமும் அகங்காரமும் வெறும் தோற்றமே; அவை உண்மையல்ல. உண்மையில் அவை குரோதமும் அல்ல, அகங்காரமும் அல்ல.

ஒரு குழந்தையிடம் பற்று இல்லை. அவன் விளையாட்டுக்காக ஒரு வீடு கட்டுகிறான்; எவனாவது அந்த வீட்டைத் தொட்டால் அவன்

---

* 'ஞானி அகங்காரம்' என்பது பிரம்மஞானம் பெற்றதனால் தூய்மையாக்கப்பட்டதும் விளக்கம் பெற்றதுமான 'நான்' என்ற உணர்ச்சி ஆகும். நித்திய அநித்திய வஸ்து விவேக முறையைப் பின்பற்றி வரும் ஞானி சமாதி அடையும்போது, அகங்காரத்தைப் பிரம்மத்தில் லயமடையச் செய்கிறான். அதன் பின் அவன் வியவகார நிலைக்கு இறங்கும்போது அகங்காரத்தின் தோற்றம் ஒன்று அவனிடம் உள்ளது; ஆனால் அந்த நிலையிலும் அவன் எப்போதும் பிரம்மத்தோடு தான் ஐக்கியமாகியுள்ள உணர்ச்சியை இழக்காமல் இருப்பான். இந்தப் போலி, 'ஞானி அகங்காரம்' எனப்படும். பக்திநெறியைப் பின்பற்றும் பக்தனே பகவானுக்கும் தனக்கும் உள்ள நித்திய சம்பந்தத்தை உணர்கிறான். அவனும் வியவகார நிலையில் ஒரு போலி அகங்காரத்தை வைத்துக்கொள்கிறான். இந்த அகங்காரத்தில் அஞ்ஞானத்திற்கு உரிய தன்மை ஒன்றேனும் இராது; இது 'பக்த அகங்காரம்' எனப்படும். இங்கே கூறப்பட்டுள்ள இரண்டு வித அகங்காரங்களும் ஒரே அனுபூதி நிலையினைக் குறிப்பன வாகும்.

குதிப்பான், கத்துவான். ஆனால் மறுகணம் அவனே அந்த வீட்டை அழிக்கிறான். இந்தக் கணத்தில் அவன் தன் துணியின் மீது மிக்க பற்று வைத்திருப்பான். அவன், ''என் அப்பா எனக்கு இதைத் தந்துள்ளார். நான் இதை யாருக்குப் தர மாட்டேன்'' என்று சொல்லுகிறான். ஆனால் மறு கணம் நீ ஒரு பொம்மையைக் கொடுத்து அவனிட மிருந்து அதை ஏமாற்றி வாங்கிக்கொள்ள முடியும். துணியை எறிந்துவிட்டு அவன் போய் விடுவான்.

இவையெல்லாம் ஞானியின் அறிகுறிகள். அவனுடைய வீட்டில் மிகுந்த செல்வம் இருக்கலாம். ஒருவேளை அவனுடைய வீட்டில் கட்டில், நாற்காலிகள், சித்திரங்கள், வண்டி, குதிரை வாகனங்கள் போன்ற போகத்திற்கு உரிய பல பொருள்கள் இருக்கலாம். ஆனால் எந்த நாளும் அவன் இவை அனைத்தையும் விட்டுக் காசிக்குப் போய்விடுவான்.

வேதாந்தக் கொள்கையின்படி விழிப்புநிலை என்று சொல்லப்படுவதில்கூட உண்மை கிடையாது (மித்யை). ஒரு சமயம் விறகுவெட்டி ஒருவன் தூக்கத்தில் கனவு கண்டுகொண்டிருந்தான். அப்போது யாரோ ஒருவன் வந்து விறகுவெட்டியைத் தூக்கத்திலிருந்து தட்டி எழுப்பினான். கனவு கலைந்துபோனதனால் விறகு வெட்டி கோபத்துடன், ''நீ ஏன் என் தூக்கத்தைக் கலைத்தாய்? நான் கனவில் ஓர் அரசனாக இருந்தேன். எனக்கு ஏழு புதல்வர்கள் இருந்தார்கள். அந்த அரசகுமாரர்கள் அனைவருமே கல்வி, வில்வித்தை முதலிய போர்முறைகள் ஆகிய எல்லாவற்றிலும் சிறந்து விளங்கினர். நான் சிம்மாசனத்தில் அமர்ந்து ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தேன். நீ ஏன் அத்தகைய என் மகிழ்ச்சியான வாழ்க்கையைக் குலைத்துவிட்டாய்?'' என்று வினவினான். அதற்கு விறகு வெட்டியைத் தட்டி எழுப்பியவன், ''அதெல்லாம் வெறும் கனவுதானே! கனவு கலைந்துபோனதனால் இப்போது என்ன நஷ்டம் வந்துவிட்டது?'' என்று கேட்டான். விறகுவெட்டி அவனிடம், ''சரிதான் போடா! விஷயம் தெரியாமல் நீ பேசுகிறாய். நான் இப்போது விறகுவெட்டியாக இருப்பது எந்த அளவுக்கு உண்மையோ, அந்த அளவுக்குக் கனவில் நான் ராஜாவாக இருந்தேன் என்பதும் உண்மைதான். விறகுவெட்டியாக இருப்பது உண்மையாகுமானால், கனவில் ராஜாவாக இருந்ததும் உண்மைதான்'' என்று பதில் கூறினான்.

பிராணகிருஷ்ணர் எப்போதும் ஞானத்தைப் பற்றித்தான் பேசுவது வழக்கம். அதனால்தான் குருதேவர் ஞானியின் நிலையைப்பற்றிக் கூறினார் போலும். அடுத்து அவர் விஞ்ஞானியின் நிலையைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். அவ்விதம் சொன்னபோது அவர் தமது சொந்த நிலையையே குறிப்பிட்டாரோ!

ஸ்ரீராமகிருஷ்ணர் : 'நேதி, நேதி-இது அல்ல, இது அல்ல' என்ற ஆராய்ச்சியின் மூலம் ஆத்மாவைச் சாக்ஷாத்கரிப்பதுதான் ஞானம் எனப்படும். 'நேதி, நேதி' என்ற விசாரம் செய்து சமாதியில் நிலைப்பதன் மூலம் ஒருவன் ஆத்ம சாட்சாத்காரம் எய்துகிறான்.

விஞ்ஞானம் என்பது, விசேஷமான அளவில் ஞானமடைதல் ஆகும். சிலர் பாலைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார்கள். சிலர் பாலைப் பார்த்திருக்கிறார்கள். சிலரோ பாலைப் பருகியுள்ளனர். யாரெல்லாம் பால் என்று வெறும் பெயரை மட்டும் கேள்விப்பட்டிருக்கிறார்களோ அவர்கள் அஞ்ஞானிகள் ஆவர். பாலைப் பார்த்திருப்பவர்கள் ஞானிகள் ஆவர். பாலைப் பருகியிருப்பவர்களே விஞ்ஞானியர் ஆவர். அதாவது விசேஷமான முறையில் பாலைப்பற்றி அவர்கள் அறிந்திருக்கிறார்கள். ஈசுவர தரிசனத்தைப் பெற்று அவருடன் மிகவும் நெருங்கிய உறவினர் போன்று பேசக் கூடியவர்களே விஞ்ஞானிகள் என்று சொல்லப்படுகின்றனர். O



இந்த இதழின் முகப்பைக் காசி விசாலாட்சியின் திருவுருவம் அலங்கரிக்கிறது.

# காசி விசாலாட்சி

மு. அருணசலம்

முழுமுதற் கடவுளைச் சைவ மக்கள் சிவபரம் பொருள் என்று போற்றுகிருர்கள்.

சிவ வழிபாடு, தென்னுட்டுக்கும் தமிழ் மக்களுக்கும் சிறப்பாக உரிய தனிக் கடவுள் நெறி. பிரபஞ்சம் எங்குமே இந்த ஒரே பொருளின் ஆட்சி நிலவுகிறது என்பது சைவப் பெருமக்கள் கருத்து.

ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாதவனுக்கு, ஆயிரம் திருநாமம் சொல்லி மக்கள் போற்றுவது, அவனுடைய சர்வ வியாபகத் தன்மையையும், மனிதனுடைய வரையறையுடையதாகிய ஏகதேசத் தன்மையையும் காட்டுவதாகும்.

யார் எந்தப் பெயரால் எங்கு எந்தத் தெய்வத்தை வழிபட்டாலும், அந்த வழிபாடுகளெல்லாம் முழுமுதற் பொருளாகிய சிவ பரம் பொருள் ஒன்றினுக்கே செல்கிறது என்பது சைவர் கொள்கை. இதையே மாணிக்கவாசகர், ''தென்னுடைய சிவன் எந்நாட்டுக்கும் இறைவனுய் உள்ளான்'' என்று தமது பாடலில் குறிப்பிட்டார்.

பரதகண்டத்தின் ஒருமைப்பாட்டிற்கு அடையாளம் காசித் தலம்.

இமயம் முதல் சேதுவரை என்று சொல்வதை 'ஆஸேது ஹிமாசலம்' என்று வடமொழியில் சொல்வார்கள். தமிழ்நாட்டில் பல்லாயிரம் சிவாலயங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பெருமையோடு விளங்குகின்றன. ஆனல் விரிந்த வடநாடு முழுமையிலும் சிறப்பான ஒரு நூறு கோயில்கூடக் காணக் கிடைப்பதரிது. இருப்பினும், வடநாட்டில் கங்கைக் கரையிலுள்ள காசித் தலமே, தலங்கள் அனைத்திலும் புனிதமானது என்ற கருத்து, வடநாட்டு மக்களிடத்திலும் தமிழ்நாட்டு மக்களிடத்திலும் நிலவி வருகிறது. இது இந்திய நாட்டின் பண்டைய ஒருமைப்பாட்டுணர்வின் விளைவேயாகும்.

காசியில் எழுந்தருளியுள்ள பெருமானின் திருநாமம் விசுவநாதர், விசுவேசர், அகிலேசர் என்பது. இவர் பூலோகத்துக்கு மட்டும் அல்லாமல் அகிலப் பிரபஞ்சத்துக்கும் நாதர் என்பது இதன் பொருளாகும். (விசுவம்-பிரபஞ்சம் )

உருவம் இல்லாத பரம்பொருள், மக்கள் உய்யும்பொருட்டு அவர்கள் மனதில் நினைக்கத் தக்கதாயும், கண்ணுல் காணத் தக்கதாயும் உருவங்கொண்டு வருகிற நிலையை மூர்த்தி என்று சொல்லுகிருர்கள்.



பரம்பொருள் நிலையை மூன்ருகச் சொல்வர். முதலாவது அருவம். அது மனம் வாக்குக்கு அப்பாற்பட்டது. அவனருளால் இந்த நிலையை ஓர் ஆன்மா தனக்குள்ளே அவன் உணர்த்த உணரலாமே அன்றி, கருவி கரணங் கொண்டு காண இயலாது. அடுத்து, உயிர்களுக்கு அருள் செய்யும் கருணையோடு அந்தப் பரம்பொருள் காட்சி தருகிற கோலம் சிவலிங்கத் திருமேனி. இது கண்முன்னே காண்கிற திடமான வடிவங் கொண்டிருப்பது உண்மை; இலிங்க வடிவம் நீண்டு உருண்ட கல்லாக இருக்கிறது. ஆனல், சந்திரசேகரர் நடராசர் மூர்த்திகளுக்கு இருப்பது போல இந்தத் திருமேனிக்கு எந்த உறுப்புக்களும் இல்லை. உறுப்பில்லாமையால் அருவம்; வடிவம் இருப்பதால் உருவம்; ஆகவே இதை ஆன்ருேர் அருவுருவம், ரூபாருபம் என்பர்.

ஆலயத்தில் நாம் கண்ணுல் கண்டு வழிபடத் தக்கவாறு உருவம் உடைய மூர்த்திகள்-கணபதி,

முருகன், நடராசர், சந்திரசேகரர், கல்யாண சுந்தரர், பிட்சாடனர், அர்த்தநாரீசுவர் ஆகியோர் எல்லாம்-உருவத் திருமேனிகள். இந்த மூன்றுக்கும் வேறுபாடு இல்லை.

உருவமாகிய மூர்த்தியைக் காணும்போதும், அருவுருவாகிய சிவலிங்கத்தைக் காணும்போதும், நாம் இவற்றுக்கு மூலமான அருவப் பொருளையே சிந்திக்க வேண்டும். வழிபாட்டு முறைகளும் சாத்திரங்களும் தோத்திரங்களும் போதிப்பது இதுவே.

பரம்பொருளை அப்பனும் அம்மையுமாக நினைப்பது ஒரு வகை. அம்மையும் அப்பனும் இந்த உலகத்தில் மக்களுக்கு ஆதரவு தருப வர்கள்.

ஆன்ம உலகில் அருவப் பொருளாய் உள்ள இறைவனையே அப்பனாகவும் அம்மையாகவும் ஏற்றுத் துதிப்பதில் மக்களுக்கு நம்பிக்கையும் ஆர்வமும் ஆறுதலும் பிறக்கின்றன. இது இயல்பே. இதை விரித்துரைப்பது அவசிய மில்லை. 'தந்தையும் தாயுமாகி', 'அப்பன் நீ, அம்மையே அப்பா ஒப்பிலா மணியே' என்பன போன்ற திருமுறைப் பாசுரங்களும் இதையே நமக்கு எடுத்துரைக்கின்றன.

கோயில்கள் இதை வடிவத்தில் காட்டுகின்றன. பிற்காலத்தில் சிவாலயங்களில் அம்பிகைக்குத் தனிக் கோயில் அமைக்கப்பெற்று, சக்தி வழிபாடு பெருகியது இந்த நினைவினால்தான். தாயுமான மூர்த்தியும் இதை விளக்குவதே. சிவம் சக்தி என்ற பேதம் இல்லாது போயினுங்கூட, அவனுடைய கருணைக்குத் தனி உருவம் கொடுத்து 'அம்மா' என்று அழைத்து வழிபடுவ தில் மக்கள் மனநிறைவு பெறுகிறார்கள்.

தமிழ்நாட்டில் கிராமம்தோறும் ஏற்பட்டுள்ள அம்பிகை கோயில் இந்த மனநிறைவினுள் எழுந்த ஒரு சின்னமேயாகும். அம்பிகையைத் தனியே வழிபடுவதனால் அம்பிகை வேறு என்பது பொருளல்ல. ஒன்று என்று காட்டவே அர்த்த நாரீசுவரர் வடிவமும் அதுபற்றிய கதைகளும் எழுந்தன. கோயில்களில் அம்பிகை கோயில் அமைத்திருப்பது தமிழ்நாகரிகத்தின் சிறப்பான விளைவு.

ஒவ்வொரு கோயிலுக்கும், அங்குள்ள சிவ லிங்கத் திருமேனிக்கும், அம்பிகையின் திரு மேனிக்கும் தனியாகப் பெயர்கள் சூட்டப்பட்டன. அந்தப் பெயர்கள் யாவும் அந்த அந்தத் தலத் துக்கும், ஆங்காங்குப் பக்தர்களுக்குச் சிவபெரு மான் அருள்புரிந்த வரலாற்றுக்கும் தொடர் புடையன. இது எல்லோரும் நன்கு அறிந்தது.

காசித் தலத்தில் பெருமான் திருநாமம் விசுவ நாதர் என்பது. இதன் பொருள் முன்னே சொல்லப்பட்டது. அம்பிகையின் திருநாமம் விசாலாட்சி. இறைவன் சகலப் பிரபஞ்சங் களுக்கும் நாதன் என்ற முறையில், அவனுடைய தேவி சகலப் பிரபஞ்சத்திலும் உள்ள சீவராசிகள் அனைத்தையும் தன் கண்ணால் கண்டு அருள் சுரக்கிறாள். அதுபற்றியே அவள் கண்கள் அனைத்தையும் தழுவிக் காணும்பொருட்டு விசாலமாயுள்ளன. அவள் பெயர் விசாலாட்சி. தமிழ்ப் புலவர்கள் அந்த அம்மையைப் 'பெருந்தடங்கண்ணம்மை' என்று சொல்லி மகிழ்வார்கள். விசாலாட்சி என்ற பெயர் காசிக்கே சிறப்பானது.



லலிதா ஸகஸ்ரநாமங்களில் 'விசாலாக்ஷ்யை நம:' என்பதும் ஒன்று; இந்த ஸகஸ்ரநாமங்கள் வேதங்களையடுத்துத் தொகுக்கப்பட்டவை; காலத் தால் மிகவும் பழையவை.

இந்திய மக்கள் அனைவருக்குமே காசி சிறந்த புண்ணியத் தலமாதலால், அதனிடத்து மிக்க ஈடுபாடு கொண்ட தமிழ்மக்கள் எல்லோரும் காசிக்குச் சென்று வழிபட இயலாத நிலையை மனதில் கொண்டு, தங்கள் தங்கள் ஊரிலுள்ள ஆலயத்திலும் காசிவிசுவநாதரைப் பிரதிஷ்டை செய்துகொண்டார்கள். ஆலய நிர்மாணத்தில் முதல்பிராகாரத்தில் வாயுமூலையில் திருமாளிகைப் பத்தியிலோ தனிக்கோயிலாகவோ காசி விசுவநாதரைப் பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்ற விதியும் வழக்கும் ஏற்பட்டிருக்கின்றன. சில கோயில்களில் விசுவநாதரோடுகூட விசாலாட்சி அம்மையையும் பிரதிஷ்டை செய்திருப்பது உண்டு.

தமிழ்நாட்டில் பாடல் பெற்றனவும் பெறாதனவும் அல்லாமல், புதிதாகச் சைவப் பெருமக்கள் கோயில் கட்டியிருக்கிறார்கள். அப்படிக் கட்டியவற்றுள் சிலவே அவ்விடத்துச் சார்பான பெயர்களைப் பெற்றிருக்கும். பெரும்பான்மையானவை மீனாட்சிசுந்தரேசர் கோயில், கயிலாயநாதர் திரிபுரசுந்தரி கோயில் என்றே பெயரிடப்பட்டிருக்கக் காணலாம்.

குடந்தைக் காரோணம் என்பது கும்பகோணம் நகரிலுள்ள பாடல்பெற்ற மூன்று தலங்களில் ஒன்று. இந்தத் தலம் சம்பந்தர் பதிகமுடையது. இங்கே சுவாமி காசி விசுவநாதர், அம்பிகை காசி விசாலாட்சி என்றே இன்றும் வழங்கப் பெறும்.

நம் நாட்டில் ஆங்காங்கே பல தலப் பெயர்களையும் சுவாமி பெயர்களையும் பல காரணம் பற்றி ஒரு தொடராகச் சேர்த்து வழங்கும் வழக்கம் உண்டு. இவ்வாறு வழங்கும் ஒரு தொடர் காசி விசாலாட்சி, காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி என்பது.

காசிக்கு உரிய பெயர்களில் மகாஸ்மசானம் என்பது ஒன்று. மயானம் என்பது எல்லாம் சாம்பலாகும் இடம். உடல் சாம்பலாவது ஊர்தோறுமுள்ள மயானத்தில். ஆனால் உடலை விட்டு உயிர் பிரிந்தபிறகும்கூட, உயிரைப் பற்றியிருந்த ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்களும் உடலோடு எரிந்துபடுவதில்லை; உயிரைத் தொடர்ந்தே வருகின்றன. இதனால் தான் உயிர்கள் மீண்டும் பிறவியெடுத்து, பின் இறந்து, பிறப்பு இறப்பு என்ற சுழலில் சிக்கி அவதியுறுகின்றன. இந்த அவதி காசியில் நீங்குகிறது. மகாஸ்மசானம் என்பதன் பொருள் இதுவே. இங்கு உயிரை வாட்டுகிற மலங்கள் சாம்பலாவதால் இது மகா ஸ்மசானம் எனப்பட்டது. இந்த மயானத்தில் இறந்தவருக்குப் பின் மலங்கள் இல்லை; ஆகவே, பிறவி இல்லை; பின் முக்திதான் என்பது பொருளாகும்

மயானம் என்ற இந்தக் கருத்தில் தமிழ் மக்களுக்கு ஈடுபாடு மிகுதி உண்டு. கச்சி மயானம், கடவூர் மயானம், நாலூர் மயானம் என்ற தலப் பெயர்களைக் காண்க. கடவூர் மயானம் மகாஸ்மசானம் என்று கருதப்பட்டது போலும். அதனால்தான் அங்கே சுவாமிக்குப் பெரிய பெருமான் அடிகள் என்ற பெயர் தேவாரத்தில் வழங்குகிறது. சம்பந்தர் இங்கு 'ஆசை தீரக் கொடுப்பார்' என்று சொல்லுகிறார்.

---

## நாட்டை ஆள்பவன் செய்யும் பிரதிக்கினை



''இந்த நாட்டு நன்மக்களே! உங்களுக்கு நான் உறுதிமொழி அளிக்கிறேன்—உங்களுக்கு எத்தகைய துன்பமும் நேராதவாறு நான் இந்த நாட்டைக் காப்பேன். உங்களுக்கு என்னால் எத்தகைய தொந்தரவு நேர்ந்தாலும், நான் பிறந்த நாள் முதல் இறக்கும் நாள் வரையில் செய்துள்ள நற்செய்கைகளின் புண்ணியத்தை இழந்தவனாவேன். இந்த நாட்டை அறநெறியில் ஆள்வதற்கு நீங்கள் என்னைத் தேர்ந்தெடுத்து, இந்தப் பூமியை எனக்கு அளித்திருக்கிறீர்கள். வேளாண்மையும் வாணிபமும் வளர்ந்து, நீங்கள் வளமாக உடல் வலிமையுடனும் மன வலிமையுடனும் வாழ நான் பாடுபடுவேன். பயனற்ற சுகபோகங்களிலும் கேளிக்கைகளிலும் ஈடுபடாமல் நல்லாட்சி புரிந்து, நாட்டில் எல்லா வளங்களும் பொங்கச் செய்வேன்'' என்று ஆட்சியாளன் பிரதிக்கினை செய்கிறான்.

—ஐதரேய ப்ராஹ்மணம், 8-3-15.

அப்பர் சுவாமிகள் 'தன்னை நோக்கித் தொழுது எழுவார்க்கெல்லாம் பின்னை என்னுர் பெருமான் அடிகளே' என்ருர். சுந்தரமூர்த்தி, 'எல்லார்க்கும் இல்லை என்னுது அருள் செய்வார்', 'பீடை தீர அடியாருக்கு அருளும் பெருமான்' என்றெல்லாம் பாடுகிருர். இவை எல்லாம், முன்னதே மலங்களைப் போக்கி முக்தி அளிப்பதால் மயானம் என்ற பெயர் வந்தது என்று முன்கூறிய கருத்தோடு ஒப்புநோக்கத் தக்கவை.

இனி, காசியாகிய தலத்தில் இறந்தவர்கள் முக்தி பெறுவார்கள் என்பது சாத்திரத்தின் கூற்று. 'காசியில் இறக்க முக்தி' என்பது பழமொழி. காசியில் இறப்போருக்குப் பிறவித் துன்பத்தால் வந்த களைப்பு நீங்கிடுமாறு விசாலாட்சி அம்மையார் தமது முன்ருனையால் விசிற, விசுவநாதப் பெருமான், அவர்கள் உயிர் பிரியும் தருணத்தில், அவர்கள் செவியில் தாரக மந்திரத்தை உபதேசம் செய்து பரமுக்தியளிப்பார் என்று புராணங்கள் கூறும்; பின்வரும் காசி காண்டப் பாடல் (அகத்தியர் விந்தவரையடைந்தது, 53) காண்க:

இத்தலை எய்த இறக்குநர்
யாரும் இளைப்பாற
உத்தரிகங்கொடு மாதுமை வீசிட
உமையோர்பால்
வைத்த அரும்பொருள்
மேவரு தாரக மறையோதி
முத்தி அளித்திடும்
இப்பதி யார் விட முயல்வாரே?

அம்மையார் ஒண்தொடித் தடக்கையின் வீசு நுண் துகில் தோகையிற் பிறந்த தென்றல் மோகமும் தளர்ச்சியும் தாகமும் தணிப்பது என்பது, திருவருள் என்ற சக்தி நிபாதம் விளையவே, அந்த அருள்நிழலிலே தங்கிய ஆன்மா வினைகளின் பந்தமும் மலப் பிடிப்பால் விளைந்த பிறவி வெம்மையும் தீர்ந்து முக்தி பெறுகிறது என்பது குறிப்பு. ○

ஒரு நீதிக் கதை:

## உயர்வும் தாழ்வும்



ஒரு சமயம் குரு நிலையில் இருந்த ஒருவர் தம் சீடனுக்குப் போதனை செய்துகொண்டிருந்தார். அப்போது அவர், ''ஓர் ஆட்டின் உடலில் மிகவும் சிறந்த பாகம் எது?'' என்று கேட்டார்.

சீடன், ''ஆட்டின் நாக்கு'' என்று பதில் சொன்னுன்.

மீண்டும் குரு, ''ஆட்டின் மிகவும் இழிந்த உறுப்பு எது?'' என்று வினவினுர்.

அதற்கும் சீடன், ''ஆட்டின் நாக்கு!'' என்றே பதில் கூறினுன்.

''இரண்டு கேள்விகளுக்கும் ஒரே மாதிரியான பதிலைச் சொல்கிருயே, ஏன்?'' என்ருர் குரு.

சீடன், ''ஒரு மனிதன் தன் நாவை எப்படிப் பயன்படுத்துகிருனே, அதை முன்னிட்டே அவன் பெருமையை அல்லது சிறுமையை அடைகிருன்'' என்று விளக்கம் கூறினுன்.

சீடனின் பதில் குருவிற்குத் திருப்தி தந்தது. தாம் சொல்ல வந்த கருத்தைச் சீடன் உணர்ந்துகொண்டதை அறிந்து அவர் மகிழ்வுற்ருர்.

—விவேகானந்ததாசன்

# பாரதியாரும் சகோதரி நிவேதிதையும்

பெ. சு. மணி

பாரதியாரின் பொது வாழ்க்கைப் பிரவேசத்தில் திசைகாட்டியாகவும், பாரதியாரின் அரசியல், சமூக, ஆன்மிகப் பணிகளுக்குத் திட்டவட்டமான வடிவமைப்பை அளித்தவராகவும் விளங்கியவர் சகோதரி நிவேதிதை.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் மீது எழுந்த தீவிர எதிர்ப்புணர்ச்சியால், 'வெள்ளைநிற'த்தின் மீதே வெறுப்பை வளர்த்துக்கொள்ளும் ஒரு நிலை இருந்தது. தேசியகவி பாரதி இந்த நிறவேற்றுமையை மறந்து, சகோதரி நிவேதிதையைப் பாராட்டியுள்ளார். 'இந்தியமயமாக்கும் புதுமையான தீவிர தேசிய தத்துவப் பிரசாரகர்' என்னும் புகழுரைக்குப் பாத்திரமாக நிவேதிதாதேவி நலமுடன் வாழ்ந்து, நாட்டிற்கு மேலும் வழிகாட்ட வேண்டும் என்று பாரதியார் இறையருளை வேண்டினார்.

ஓயாது உழைத்ததனால் உடல்நலம் தேய்வுற்று நிவேதிதை துன்புற்ற காலத்தில் உள்ளம் வருந்திய பாரதியார் 24-11-1906 'இந்தியா' இதழில் 'சகோதரி நிவேதிதை' என்ற தலைப்பில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்—

''இந்தியாவிலே தோன்றியிருக்கும் புது எழுச்சிக்கு எத்தனையோ பேர் எத்தனையோ விதமான காரணங்களாக விளங்குகிறார்கள். சுவாமி விவேகானந்தர் மதாசாரியாராகவே நாள்கழித்த போதிலும் தேசபக்தி எழுச்சிக்கு அவர் பெரியதோர் மூலாதாரமாக நின்றார். இவர் காலஞ் சென்றதற்கப்பாலும் இவருடைய சிஷ்யர்களில் பலர் மேற்படி தொழிலுக்குப் பேருதவி செய்து வந்திருக்கிறார்கள். இங்ஙனம் விளங்கும் சிஷ்ய ரத்தினங்களிலே சிறப்பு வாய்ந்தவர் சகோதரி நிவேதிதையே ஆவார். இம் மாதரசி வெள்ளைக்காரர் குலத்திலே தோன்றியபோதிலும் நம்மவர்களுக்கு மிகுந்த உபகாரியாக இருக்கின்றார். ராட்சஸ குலத்திலே தோன்றியபோதிலும், விபீஷணர் சற்குண மூர்த்தியாகிய ஆரியவேந்தனுக்குப் பெரும் துணையாக நிற்கவில்லையா? இம் மாதரசி இப்போது சிறிது காலமாக மிகுந்த நோய் கொண்டிருக்கிறாரென்று கேட்டு, அளவிறந்த வருத்தமடைகிறோம். இவர் விரைவிலே ஸ்வஸ்த நிலை அடைந்து நெடுங்காலம் உலகத்திற்கு நன்மை செய்து வரும்படியாக அருள்புரிய வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கின்றோம். (பக்கம் 341, பாரதி தரிசனம்-1).

விவேகானந்தரின், ''சிஷ்ய ரத்தினங்களிலே சிறப்பு வாய்ந்தவர் சகோதரி நிவேதிதையே'' என்று அழுத்தம் கொடுக்கிறார் பாரதியார். இத்தகைய 'சிஷ்ய ரத்தின'த்தையே தமது 'குருமணி'யாக வரித்துக்கொண்டார் பாரதியார்.

தேசபக்தி, ஆன்மிக நாட்டம், பெண்ணுரிமை பேணல் முதலானவற்றை நிவேதிதாதேவியிடமே 'குரு உபதேச'மாகப் பெற்றதாகப் பாரதியார் கூறுகிறார். பகவத் கீதைத் தோற்றச் சூழலையே நிவேதிதாதேவியிடம் தாம் பெற்ற குரு உபதேசத்திற்கும் அமைத்துக்கொள்கிறார் பாரதியார்.



நீண்ட நெடிய தமிழ்க்கவிதைப் பயணத்திற்குப் புதிய திருப்பம் அளித்த 'ஸ்வதேச கீதங்கள்' கவிதைத் தொகுப்பை, தமிழறியாத சகோதரி நிவேதிதாதேவிக்குப் படையலாகப் படைத்ததில் பாரதியார் தமது வாழ்க்கையில் ஏற்பட்ட புதிய

எழுச்சியைச் சுட்டிக்காட்டுகிருர். நூலின் 'ஸமர்ப்பணம்' பேசுகிறது—

ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விசுவரூபம் காட்டி ஆத்துமநிலே விளக்கியதொப்ப, எனக்குப் பாரததேவியின் ஸம்பூர்ண ரூபத்தைக் காட்டி ஸ்வதேச பக்தியுபதேசம் புரிந்தருளிய குருவின் சரணமலர்களில் இச் சிறுநூலே ஸமர்பிக் கின்றேன். —ஆசிரியன்

பாரதியின் ஸ்வதேச கீதங்களில் இடம் பெற்றுள்ள பதினன்கு பாடல்களும், பாரதியாரின் 'அரசியல்நெறி'யைப் புலப்படுத்துவன; சகோதரி நிவேதிதையின் 'அரசியல் நெறி'க்கும் ஒத்திசை வன. பாடல்களின் முதலடிகளாவன—

1. வந்தே மாதர மென்போம்
2. வந்தே மாதரம் (ஜய ஜய பாரத)
3. மன்னுமிமயமலே
4. எந்தையும் தாயும்
5. வாழிய செந்தமிழ்
6. விண்ணகத்தே இரவிதனே (லஜபதிராய் துதி)
7. பாபேந்திரியஞ் செலுத்த (பூபேந்திரர் விஜயம்)
8. நெஞ்சிலுரமுமின்றி
9. நாடிழந்து மக்களேயும் (லஜபதிராய் பிரலாபம்)
10. தொண்டு செய்யும் அடிமை
11. வீர சுதந்திரம் வேண்டி நின்ருர்
12. முன்னுளில் இராமபிரான் (தாதாபாய் நௌரோஜி)
13. ஓய் திலகரே! நம்ம ஜாதிக்கடுக்குமோ
14. பேரருட் கடவுள் திருவடியாணே (மாஜினி சபதம்)

சகோதரி நிவேதிதைக்கு 'ஸ்வதேச கீதங்கள்' முதற் பாகத்தை 1908-இல் சமர்ப்பித்துச் சேவடி பரவியதோடு அமையாமல், இரண்டாம் பாகத் தையும், (1909-இல் ஜன்மபூமியையும்) தமது குருவின் சரணமலர்களுக்குப் படைக்கிருர். இந்த 'ஸமர்ப்பண' உரையில் இராமகிருஷ்ணர் இயக் கத்தின் முதல் பெண்துறவியின் வாயிலாகத் 'துறவுப் பெருமை'யையும் அறிந்ததாகப் பாரதி யார் கூறுவது குறிப்பிடத்தக்கது.

எனக்கு ஒரு கடிகையிலே, மாதாவினது மெய்த் தொண்டின் தன்மையையும், துறவுப் பெருமையையும், சொல்லாமலுணர்த்திய குரு மணியும், பகவான் விவேகானந்தருடைய தரும புத்திரியும் ஆகிய ஸ்ரீமதி நிவேதிதாதேவிக்கு இந் நூலே ஸமர்ப்பிக்கின்றேன்.

—ஸி. சுப்பிரமணிய பாரதி

இவ்வாறு இருமுறை தமது முதல் தமிழ் நூல்களேச் சகோதரி நிவேதிகைக்குப் பாரதியார் படைத்து, குருபக்தியை வெளிப்படுத்தினர்.

இதற்கெல்லாம் ஆதாரமாக அமைந்தது பாரதியார் — நிவேதிதாதேவியின் சந்திப்பே ஆகும்.

பாரதியாரின் நெஞ்சைக் கவர்ந்த திலகர், அரவிந்தர், கவி ரவீந்திரர், லாலா லஜபதிராய், விபின் சந்திர பாலர், ஜகதீச சந்திர போஸ், கோகலே. பூபேந்திரநாத் தத்தர் ஆகிய அனே வரும் சகோதரி நிவேதிதையின் தேசபக்திக்குத் தலேவணங்கியவர்கள்.

1906 கல்கத்தாக் காங்கிரஸுக்குச் சென்று திரும்பும் வழியில், கல்கத்தாவிலுள்ள டம்டம் என்ற இடத்தில் பாரதியார், சகோதரி நிவேதி தையைச் சந்திந்தார். இந்தச் சந்திப்பின் வருணனே வருமாறு:

இந்தப் புனிதவதியைப் பாரதியார் தரிசித்த போது நிவேதிதாதேவி, ''மகனே! உன் மனதில் பிரிவுணர்ச்சியை நீக்கு. ஜாதி, மதம், குலம், கோத்திரம் என்ற அநாகரிகமான வித்தியாசங் களே விடு. அன்பை மட்டும் அகத்தில் கொள். பிற்காலத்தில் நீ ஒரு தீரனுக, சரித்திரப் பிரசித்தி பெற்ற தேவனுக வருவாய்'' என்று உரைத்தார்.

பிறகு, பாரதிக்கு விவாகமாகவில்லேயா என்று கேட்டார். பாரதியார் தமக்கு விவாகமாகி, இரண்டு வயதுப் பெண்குழந்தை இருக்கிறது என்ருர். ''பின் ஏன் மனேவியை அழைத்து வரவில்லே?'' என்ருர் நிவேதிதாதேவி.

''இன்னும் என் மனதில் மனைவியைச் சரிசமமாகப் பொது இடங்களுக்கு அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை. மேலும், காங்கிர ஸுக்கு அவளை அழைத்து வந்தால் என்ன பிரயோஜனம்?'' என்றார் பாரதி.

இதைக் கேட்ட நிவேதிதாதேவி மிகக் கோப மடைந்தார். ''சமூகத்தில் பாதி அடிமைப் பட்டிருக்கையில், மறு பாதி விடுதலை பெற முடியுமா? போனது போகட்டும், இனியும் அவளைத் தனி என்று நினைக்காமல், உன் இடக் கையாக மதித்து, மனதில் அவளைத் தெய்வமெனப் போற்றி நடத்தி வா'' என்றார்.



சகோதரி நிவேதிதை

அப்படியே வாக்களித்துக் கொடுத்தார் பாரதி. நிவேதிதாதேவி தாம் ஹிமாலயத்திலிருந்து கொணர்ந்த ஆலிலை அளவுள்ள ஓர் இலையை, தம் ஞாபகார்த்தமாகப் பாரதிக்கு அளித்தார். பாரதி யார் தம் கடைசிக் காலம் வரை அதை விடாது பொக்கிஷமாய்ப் போற்றி வந்தார். சில நண்பர்கள் அதிக விலை கொடுப்பதாய்க் கேட்டுப் பார்த்தபோதுகூட, அதை அவர் கொடுக்க இஷ்டப்படவில்லை. அவரது மரணத்துக்குப் பின் அந்த இலை எங்கேயோ காணமற் போய்விட்டது.

'நாகரிக வளர்ச்சியிலே ஸ்திரீகளின் ஸ்தானம்' என்னும் தலைப்பில், 9-2-1907 'இந்தியா' இதழில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார் பாரதியார். கட்டு ரையின் முடிவிலே பாரதி பின்வருமாறு கூறுவது நிவேதிதாதேவியின் சந்திப்பை உறுதிப்படுத்து கிறது—

''தேசத்திலே எந்த விதமான பெருங்காரியமும் கைகூடிவர வேண்டுமானால் அதற்கு ஸ்திரீகளின் மனோபலம் இல்லாமல் தீராது. இதனை எழுது பவரிடம் ஸ்ரீ சகோதரி நிவேதிதாதேவி சில நற் போதனைகள் கூறிவருமிடையே அந்த அம்மை சொன்னார்—'ஐயா, மாதர்களை இருட்டிலே தள்ளி விட்டு அவர்கள் அறியாமல் நீங்கள் மேலான நிலை மைக்கு வந்துவிட முயல்வது வீண் முயற்சி. அது ஒருபோதும் நடக்கமாட்டாது' என்றார். இந்த வசனத்தை ஒவ்வொரு தேசாபிமானியும் மனதிலே பதித்துக்கொள்ளும்படி விரும்புகிறோம்.'' (பக்கம் 23, சித்திர பாரதி.)

வீர உணர்வின் திருவுருவமாக விளங்கிய நிவேதிதையைச் சந்தித்த மற்றொரு நிகழ்ச் சியைப் பாரதியார் தமது நெருங்கிய நண்பரான வழக்கறிஞர் எஸ். துரைசாமி ஐயரிடம் பல நாள் கழித்துக் கூறினார். இதன் விவரம் வருமாறு—

''பாரதத்தாய் விலங்குகளோடு கண்முன் நிற்ப தாய்க் காணுமளவுக்கு உணர்ச்சி வேண்டும்; அப்படிக் கண்டால்தான், விலங்கை எப்படியாவது நீக்க வேண்டும் என்ற உணர்வு வரும்—என்று நிவேதிதாதேவி வற்புறுத்திச் சொன்னாராம்; இப்படிக் கூறிவந்த அந்த அம்மையார், திடீரென ஆவேசம் உற்றவர் போல் தமது மேலங்கியை மார்பெதிரே பிய்த்துத் திறந்து, 'உங்களுக்குத் தைரியம் வேண்டும்; எங்களை இங்கே குத்திக் கொல்ல உங்களுக்குத் தைரியம் வேண்டும்' என்றாராம். தேச விடுதலைக்காகத் தம் போன்ற வெள்ளையரைத் 'துஷ்ட நிக்ரஹம்' செய்யவும் அஞ்சாத தீரர் வேண்டும் என்பது நிவேதிதையின் குறிப்பு. அடிமை மக்களுக்கு ஆண்மையின் அவசியத்தை அவர் அவ்வாறு வற்புறுத்தினார். இந்த உபதேசம் பாரதியின் நெஞ்சில் ஆழப் பதிந்தது.'' (பக்கம் 24, சித்திர பாரதி.)

நிவேதிதாதேவியிடம் சென்னை அரசியல் நட வடிக்கைகளைப் பற்றியும் பாரதியார் உரையாடி யிருப்பதாகத் தெரிகிறது. அதைக் குறித்துப் பாரதியார் பின்வருமாறு எழுதியுள்ளார்—

''கல்கத்தாவில் நிவேதிதாதேவியிடம், 'வாலிபராகிய எங்களை எல்லாம் மேலிருந்து நடத்துவதற்குத் தக்க முதுமை கொண்ட தேசபக்தத் தலைவர்கள் சென்னைப்பட்டினத்தில் இல்லையே! என்ன செய்யலாம்?' என்று நாம் கேட்டதற்கு அந்த அம்மை, 'அழகியசிங்கப்பெருமாள் இருக்கிறார். பொது விஷயங்களில் நமக்குச் சம்சயங்கள் ஏற்படுமானால் அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்' என்றார்.''

பாரதியார் ஆசிரியராக இருந்த 'பாலபாரதா' ஆங்கில ஏட்டோடு சகோதரி நிவேதிதைக்குத் தொடர்பு இருந்தது. முதலில் நிவேதிதையை, 'பாலபாரதா' ஆசிரியராக இருக்க வேண்டினர் என்றும், நிவேதிதை மறுக்கவே, பாரதி ஆசிரியரானாராம். 'பாலபாரதா'விற்குக் கட்டுரைகளை நிவேதிதை அனுப்பி வைத்தார். நிவேதிதையின் நாட்குறிப்பில் இதற்கான ஆதாரம் உள்ளது.

பாரதியார் 1906-இல் இவ்வாறு சகோதரி நிவேதிதையைச் சந்திப்பதற்கு முன்பே, நிவேதிதை 1902-இல் சென்னைக்கு வந்திருக்கிறார். அந்தச் சமயத்தில் பாரதியார் எட்டயபுர சம்ஸ்தானத்தில் வேலை பார்த்துக்கொண்டிருந்தார்.

பேசும் அரசியலில், அரசியலைவிட, பேசும் ஆங்கிலமொழியில் மோகம் கொண்டோர் பலர். இவர்களைத் தமது சென்னை விஜயத்தின்போது நிவேதிதை சாடிச் சீறிய சம்பவமொன்று நிகழ்ந்தது.

சேலத்தில் தேசபக்தியைத் தட்டியெழுப்பும் உருக்கமான பேச்சை, சகோதரி நிவேதிதை அழகான ஆங்கிலத்தில் நிகழ்த்தினார். நன்றியுரை கூற வந்தவர், ''இத்தகைய ஆங்கிலப் பேச்சைக் கேட்கும் பேறு நமக்கு இன்று வாய்த்துள்ளது'' என்று பேச்சின் கருத்தைக் கூறாமல், பேச்சின் மொழியைப் பாராட்டினார்.

சகோதரி நிவேதிதைக்குப் பொறுக்க முடியவில்லை. திடீரென்று துள்ளிக் குதித்து எழுந்து நின்றார். ''மூடும் உமது திருவாயை. அடிமைத்தனத்தில் உழன்று கிடக்கும் அசடுகள். ஆங்கில ஆட்சிக்குப் பொருந்திய பொம்மைகள். தேசீய உணர்வு கெட்ட மரக்கட்டைகள். நாட்டுக்கு உரிய வேலைத் திட்டம் உங்கள் காதில் நுழையவில்லை. ஆங்கிலச் சொற்சித்திரத்தில் சொக்கிவிட்டீர்கள். வெட்கம்!'' என்று கர்ஜித்துக்கொண்டு வெளியேறிவிட்டார்.

1906-இல் உருவான சுதேசியக் கிளர்ச்சியில், அந்நிய நாட்டுத் துணி பகிஷ்காரம் ஒரு முக்கியமான வேலைத்திட்டம். இந்தச் சுதேசிய வேலைத் திட்டத்திற்குச் சகோதரி நிவேதிதை அளித்த ஆதரவைப் பாரதியார் குறிப்பிடுகிறார். 8-6-1907 'இந்தியா' இதழில் வெளிவந்துள்ளது—

''சுவாமி விவேகானந்தரின் சிஷ்ய ரத்தினங்களிலே ஒருவரும், மஹா வேதாந்தினியுமாகிய நிவேதிதாதேவி அன்னிய வஸ்து பஹிஷ்காரம் செய்வதை மிகவும் சிறந்த காரியமென்று அங்கீகாரம் செய்திருக்கிறார்.'' (பக்கம் 30, பாரதி தரிசனம்-2.)

சகோதரியார், இந்தியக் கலை, இலக்கிய மரபின் செழுமைக்கும் வளர்ச்சிக்கும் பாடுபட்டவர். பாரதியாரின் நெருங்கிய நண்பர் தியாகி சுப்பிரமணிய சிவா, நிவேதிதாதேவியின் மேற்கோள் ஒன்றைத் தந்து, 'தமிழ்நாட்டுக் கிராமக் கவிதை'யின் மாண்பைச் சுட்டிக் காட்டுகிறார்—

''இனி, பிச்சைக்காரப் பாட்டுக்களைக் கவனிப்போமானால் அவைகளிலும் ஆச்சர்யகரமான பாட்டுக்கள் இருக்கின்றன. இவைகளைப்பற்றி நிவேதிதாதேவி என்னும் கீர்த்திபெற்ற சந்நியாசினி பின்வருமாறு கூறுகின்றார்: 'இப்படிப்பட்ட பிச்சைக்காரப் பாட்டுக்கள் ஏராளமாக இருக்கின்றன. இவை தெளிவாயும், அழகாயும், காதிற்கினிமையாயும் இருக்கின்றன. ஆகவே இந்திய தேசத்துப் பிச்சைக்காரன் கிராம ஜனக் கவிதையால் கிராம வாழ்க்கைக்கு மிக்க உதவி செய்கிறான். இன்னும் இவன் கிராம ஜனங்களுக்கு வேதாந்த உபதேசம் செய்பவனாக இருக்கிறான்.'' (பக்கம் 68, ஞானபானு, ஜூன் 1915.)

இவ்வாறு இந்திய தேசபக்தர்களைப் பலவேறு துறைகளிலும் கவர்ந்த நிவேதிதாதேவியின் புகழைத் தமிழ்மக்கள் புரிந்து போற்றப் பின்வருமாறு பாமாலை தொகுத்தார் பாரதியார்—

நிவேதிதா

அருளுக்கு நிவேதனமாய் அன்பினுக்கோர்
கோயிலாய், அடியேன் நெஞ்சில்
இருளுக்கு ஞாயிறாய் எமதுயர்
நாடாம் பயிர்க்கு மழையாய், இங்குப்
பொருளுக்கு வழியறியா வறிஞர்க்கும்
பெரும் பொருளாய்ப் புன்மைத் தாதச்
சுருளுக்கு நெருப்பாகி விளங்கிய தாய்
நிவேதிதையைத் தொழுது நிற்பேன்.

# வேதாந்தச் சிந்தனை

## அஷ்டாவக்கிர கீதை

'ஹரிணி'

### வரலாறு

ஒரு சமயம் ஜனக மகாராஜனுடைய சபை பண்டிதர்களால் நிரம்பியிருந்தது. அரசன் தனது அரசவைப் பண்டிதரிடம் பிரம்ம தத்துவத்தைப் பற்றிய விளக்கம் கேட்டுக்கொண்டிருந்தான். அப்பொழுது பண்டிதர் கூறிய ஒரு கருத்து அரசனுடைய சிந்தனையைத் தூண்டியது. ''குதிரையில் ஏறுகிற ஒருவன் சேணத்தின் ஒரு சுவட்டில் கால் ஊன்றி மற்றென்றில் கால் வைக்கும் நேரத்திற்குள் பிரம்மஞானத்தைப் பெறலாம்'' என்பதைக் கேட்ட அரசன் அதைச் சோதித்துப் பார்க்க விரும்பிப் பண்டிதரிடம், ''குதிரை கொண்டுவரச் சொல்லலாமா?'' என்றான்.

பண்டிதரோ, ''நான் சொன்ன வார்த்தையைக் கண்ணெதிரே என்றால் நிருபித்துக் காட்ட இயலாது. நிருபித்துக் காட்ட முடியாததனால் அந்த வாக்கியம் பொய்யானது என்றும் கூற முடியாது. ஏனெனில் அது ஆத்மஞானத்தைப் பெற்ற ஆன்றோர்களின் அருள்வாக்காகும்'' என்றார். இதனால் மனம் திருப்தியடையாத ஜனகன் அவரைச் சிறைச்சாலைக்கு அனுப்பினான். இதே கேள்வியைக் கேட்டு, விளக்கம் கூற இயலாத மற்றும் பல பண்டிதர்களையும் சிறையில் தள்ளினான்.

இந்தச் சமயத்தில் ஒரு நாள், வயதில் சிறியவரும் அறிவில் சிறந்த பெரியவருமாகிய அஷ்டாவக்கிர முனிவர் ஜனகருடைய அரசசபைக்கு வந்தார். விசித்திரமான எட்டுக் (அஷ்ட) கோணல்கள் (வக்ர) கொண்ட வடிவத்தையுடைய முனிவரைக் கண்டு ஆச்சரியமடைந்த ஜனகன் அவரை முறைப்படி வரவேற்று உபசரித்தான். அவரிடத்திலும், ''முனிவர்களில் சிறந்தவரே! குதிரை ஏறுகிற இமைப் பொழுதில் பிரம்மஞானம் பெற முடியும் என்று சொல்லப்பட்டுள்ளதே. இதைப் பரீட்சித்துப் பார்க்க விரும்புகிறேன்'' என்றான்.

முனிவர், ''அரசனே! முதலில் பண்டிதர்களை எல்லாம் விடுதலை செய்ய வேண்டும். பிறகு என்னைக் குருவாக ஏற்றுக்கொள்ள வேண்டும். அதன் பிறகு தனிமையான இடத்தில் என் முன்பாகச் சீடனாக அமர்ந்து கவனமாகக் கேட்பாயானால் அந்தச் சொற்களுக்கான விளக்கம் கூறுவேன்'' என்றார். அரசன் ஒப்புக்கொண்டு குதிரை மீதேறி முனிவருடன் காட்டிற்குச் சென்றான்.

காட்டில் தனிமையான இடத்தை அடைந்தவுடன், அரசன் குதிரைமீது ஏறும் நேரத்திற்குள் பிரம்மஞானம் அடையலாம் என்பதைத் தானே முனிவரின் எதிரில் சோதித்துப் பார்க்க எண்ணி, குதிரை மீது ஏறச் சென்றான். அப்பொழுது முனிவர், ''அரசே! அவசரப்படாதே! நீ மனப்பூர்வமாக என் சீடனாக இருக்க உறுதி செய்துகொள். உண்மையான சீடன் தன்னையும் தன்னைச் சார்ந்த எல்லாவற்றையும் குருவுக்கே சமர்ப்பிக்க வேண்டும்'' என்றார்.

ஜனகன் அவ்வாறே ஒப்புக்கொண்ட மறுவிநாடி முனிவர் மறைந்தார். முனிவருடன் காட்டிற்குச் சென்ற அரசன் வெகு நேரம் சென்ற பிறகும் திரும்பி வராதது கண்ட மக்கள் அரசனைத் தேடிக் காட்டிற்கு வந்தனர். அங்கே தன்னை மறந்து நின்ற அரசனது நிலைக்குக் காரணம் முனிவரே என்று வெகுண்டு, அவரைத் தேடி அலைந்தனர். மறுநாள் அந்தி மயங்கும் வேளையில் முனிவரைக் கண்டுபிடித்து அழைத்து வந்தனர். அரசன் மறுபடியும் தன் சுயநிலையை அடைய அருள் செய்ய வேண்டும் என்று மக்கள் முனிவரை வேண்டிக்கொண்டனர்.

முனிவர், ''ஜனகா!'' என்று அழைத்தவுடனே அரசன் சுயநிலையை அடைந்தான்,

மக்கள் மகிழ்ந்தனர். பிறகு தனித்து விடப்பட்ட மன்னனைப் பார்த்து முனிவர், ''ஜனகா! நீ ஏன் இப்படி இருக்கிறாய்? உலக இயல்புக்கு மாறாக இருக்கலாமா? எல்லோரையும் போலவே இருப்பதற்கு என்ன?'' என்றார். மேலும், ''அரசே! உன்னையும் உன்னைச் சார்ந்த எல்லாவற்றையும் எனக்குச் சமர்ப்பித்தவுடனேயே, நீ எதைப் பரீட்சித்துப் பார்க்க விரும்பினாயோ, எதைக் கேட்டு அறிய விரும்பினாயோ, அவைபற்றித் தெரிந்துகொள்வதை மறந்து மௌனமாய் நின்றுவிட்டாய். உண்மையான நம்பிக்கை குருவிடம் வைத்தாலே நீ கடவுளை அடையும் வழியில் உள்ள தடைகள் நீங்கும்'' என்றார்.

ஜனகன், ''சுவாமி! தங்கள் ஆணைப்படியே நடப்பேன்; சொல்லுங்கள். சம்சார பந்தங்களிலிருந்து விடுபடும் விடுதலை மார்க்கம் எது? பிரம்ம அனுபவம் பெறுவது எவ்வாறு?'' என்று கேட்டான்.

அவ்வாறு கேட்ட அரசனுக்கு அஷ்டாவக்கிர முனிவர் ஞானத்தை உபதேசிக்கலானார். இவ்வாறு முனிவருக்கும் அரசனுக்கும் நடந்த சம்பாஷணையே அஷ்டாவக்கிர கீதை எனப்படும். இருபது அத்தியாயங்கள் கொண்ட இந்தக் கீதை பிரம்மஞான அனுபவத்தையும், முக்திக்கு மார்க்கம் எது என்பதையும் மிகவும் தெளிவாக எடுத்துரைக்கிறது.

## அஷ்டாவக்கிர கீதை

அஷ்டாவக்கிர முனிவரிடம் பணிவு ததும்ப ஜனக மன்னன் பின்வருமாறு வினவினான்— ''குருதேவரே! மனிதன் ஞானம் பெறுவது எப்படி? விடுதலை பெறுவதற்கு உரிய வழி எது? வைராக்கியத்தை எவ்விதம் கடைப்பிடிக்க வேண்டும்? இவற்றை எனக்கு விளக்கமாகச் சொல்லும்படி கேட்டுக்கொள்கிறேன்.''

ஜனகனின் கேள்விக்கு அஷ்டாவக்கிரர் பின்வருமாறு பதில் கூறினார்—அன்புமகனே, கேள்! நீ முக்தியடைய விரும்பினால் விஷயங்களை அதாவது உலகச் சுகபோகப் பொருள்களை விஷத்தைப் போல ஒதுக்கிவிடு. பொறுமை, நேர்மை, உண்மை, அன்பு, மனநிறைவு ஆகிய உயர்பண்புகளை அமுதம் போன்று ஏற்றுக்கொள்.

நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்ற ஐம்பூதங்களும் நீ அல்ல. நீ இவை அனைத்தையும் பார்வையாளனாக (சாட்சியாக)ப் பார்க்கிற ஞான வடிவான ஆன்மாவே என்று உணர்வாயானால் அதுவே முக்திபெறச் சிறந்த வழியாகும்.

இன்னும் கேள்: இந்த உடலை நானல்ல என்று ஒதுக்கிவிட்டு, ஞானமயமாக விளங்கும் ஆன்மாவில் ஒன்றுபட்டு அமைதியாக இரு. அவ்விதம் செய்வாயானால் இப்போதே பந்தத்திலிருந்து விடுபட்டுச் சுகமும் சாந்தியும் பெறுவாய்.



உனக்கு ஜாதி வேறுபாடுகளோ, வர்ணாசிரம நியமங்களோ கிடையாது. புலன்களுக்குப் புலப்படாத, உருவமற்ற, பற்றற்ற, அனைத்திற்கும் சாட்சியாக விளங்குகிற நீ ஆனந்தமாக இரு.

எங்கும் பரவியுள்ளவனே! சர்வ வியாபியே! இன்ப துன்பங்களும் நன்மை தீமைகளும் உனக்கு இல்லை. நீ செய்பவனுமல்ல, நுகர்பவனுமல்ல. நீ எப்போதும் விடுதலை பெற்ற முக்த ஆத்மாவே; அனைத்துக்கும் ஒரே சாட்சியாக இருக்கும் நீ விடுதலை பெற்றவனே என்பதுதான் உண்மை. ஆனால் உனக்கு ஒரே ஒரு பிணைப்பு உள்ளது. அது என்னவென்றால், பார்க்கப்படுகிறவனை நீ அன்னியமாகப் பார்ப்பதே உனக்குப் பந்தமாகிறது. ஆதலால், 'நானே செய்பவன், நானே கர்த்தா' என்ற கருநாகத்தால் தீண்டப்பட்டுள்ள நீ 'நான் எதுவும் செய்பவனல்ல' என்ற நம்பிக்கையாகிய அமுதத்தைப் பருகி ஆனந்தமாக இரு.

'தூய ஞானசொரூபமே நான்' என்ற திட நிச்சயமாகிற நெருப்பினால் அஞ்ஞானப் பெருங்

> கர்மத்தையோ பக்தியையோ நாமாக விட வேண்டியதில்லை. பழுத்த பழம் தானுகக் காம்பிலிருந்து விடுபடுகிற மாதிரி, கர்மம் பக்தி எல்லாம் அது பூரணமடைந்தவுடன் தாமாகவே நழுவிப் போகும்.
>
> —காஞ்சிப் பெரியவர்

காட்டைப் பொசுக்கிவிட்டு, துன்பம் எதுவும் இல்லாதவனுக, ஆனந்தமாக இரு.

இந்த உலகம் முழுவதும் எதனிடத்தில் கயிற்றில் பாம்பு போலக் கற்பிதமாகத் தோற்றமளிக்கிறதோ, அந்த ஞானனந்தப் பேரின்ப வடிவமே நீ. இந்த உண்மையை உணர்ந்து ஆனந்தமாக இரு.

மகனே! 'மனிதன் நினைப்பின் வண்ணமே உருவாகிறுன்' என்ற முதுமொழிக்கு இணங்க, தன்னை முக்தனுக நினைப்பவன் முக்தனுகவே ஆவான். கட்டுண்டவனுக நினைப்பவன் என்றென்றும் கட்டுண்டவனே ஆவான். இதுவே உண்மை என்று அறிந்துகொள்.

மிகவும் நீண்ட காலமாகவே நீ தேகாபிமானம் என்ற கயிற்றினுல் கட்டுண்டு கிடக்கிருய். ஆகவே, 'தூய ஞானசொருபமே நான்' என்ற ஞானவாளால் அதைத் துண்டித்துவிட்டு ஆனந்தமாக இரு.

இந்த உலகம் முழுவதும் தூய ஞானவடிவமாகிய நீயே நிறைந்திருக்கிருய் என்பதை உணர்ந்து, அற்பமான எண்ணங்களில் சிக்கிக் கொள்ளாமல் ஆனந்தமாக இரு.

நிபந்தனையற்ற, மாறுபாடற்ற, அளவுகடந்து நிற்கிற நீ அகம் குளிர்ந்து, குழப்பம் எதுவுமின்றி ஆழ்ந்த ஞானத்துடன் உணர்வுமயமாகவே திகழ்வாயாக!

பார்க்கும் எல்லாப் பொருள்களும் பொய் என்றும், உருவமற்ற ஆன்மாவே மெய் என்றும் அறிந்துகொள். இந்த உண்மை உபதேசத்தினுல் மீண்டும் உனக்குப் பிறவி என்பதில்லை.

இந்த உடலின் உள்ளும் புறமும் பரமேசுவரனே ஒளிர்கின்றுன் என்று அறிந்து ஆனந்தமாக இரு.

எங்கும் பரவியுள்ள ஆகாயம் ஒரு குடத்தின் உள்ளும் புறமும் ஒன்று போல நிறைந்து காணப்படுகிறது. அது போலவே படைக்கப்பட்ட பொருள்கள் அனைத்திலும் நீக்கமற நிறைந்து ஒளிர்வது பரப்பிரம்மமே என்று அறிவாயாக.

* * *

இவ்விதம் அஷ்டாவக்கிர முனிவர் அருள் மயமான தத்துவங்களை ஜனக மன்னனுக்கு உபதேசித்தார். அதைக் கேட்ட அரசன் வியப்பு மேலிடத் தன் அனுபவத்தைப் பின்வருமாறு கூறினுன்—

ஐயனே! இது என்ன விந்தை! பிரகிருதிக்கு அப்பாற்பட்டதும், மாசற்றதும், அமைதிமயமான ஞானசொருபமுமாகிய பரம்பொருள் நானே என்பதை இதுவரை நான் அறியாமற் போனேனே! இது என்ன மதிமயக்கம்!

இந்த உடலை நான் ஒருவனே ஒளிபெறச் செய்வது போல, இந்த உலகத்தையும் நானே ஒளிபெறச் செய்கிறேன். ஆதலால் இந்த வையகம் முழுவதும் என்னுடையதே, அல்லது எதுவுமே என்னுடையது அல்ல. இது ஓர் ஆச்சரியமே! இந்த உடலையும், இந்த உலகத்தையும் ஒதுக்கிவிட்டால், ஏதோ ஒரு திறமை வாய்ந்த சக்தியினுல் பரம்பொருள் எனக்குக் காணப்படுகிறதே! அலைகளும் நீர்க்குமிழிகளும் நுரையும் தண்ணீரைக்காட்டிலும் எப்படி வேறு அல்லவோ, அது போலவே ஆன்மாவினின்றும் வெளிப்பட்ட இந்த உலகம் ஆத்மாவைத் தவிர வேறு அல்ல.

நன்ருக ஆராய்ந்து பார்ப்போமானுல், ஓர் ஆடையானது நூலின் தொகுதி மாத்திரமே என்பது போலவும், கருப்பஞ்சாற்றிலிருந்து உண்டாக்கும் சர்க்கரை கருப்பஞ்சாற்றுலேயே வியாபிக்கப்பட்டிருப்பதைப் போலவும், இந்தப் படைப்பு முழுவதும் ஆன்மமயமேயாகும். தவிர இந்த வையகம் முழுவதுமே என்னிடமிருந்து தோன்றி எப்போதும் என்னுலேயே வியாபிக்கப் பட்டு விளங்குகிறது.

அண்ணலே! எனது இயற்கையான வடிவம் ஒளியே. இந்த உலகம் பிரகாசிக்கும்போது நானும் பிரகாசிக்கிறேன். ஆன்மாவை அறியாத

தனுல் இந்த உலகம் இருப்பதாகத் தோன்று கிறது. ஆன்மஞானம் ஏற்பட்டதுமே இந்த உலகம் தோன்றுவதில்லே. இந்தப் படைப்பில் பிரம்மா முதல் சிறு புல்பூண்டு வரையிலும் உள்ள அகில உலகமும் அழிந்தபோதிலும் எனக்கு மட்டும் அழிவு என்பதில்லே. இது என்ன விந்தையோ! ஆகவே விந்தையாக இருக்கிற என்னேயே நான் வணங்குகிறேன்.

குருதேவா! எனக்கு உடல் இருந்தபோதிலும் நான் இரண்டற்ற ஏகவடிவினனுகவே இருக் கிறேன். நான் எங்கும் போவதுமில்லே, வருவது மில்லே. ஆனுல் இந்த உலகம் முழுவதும் பரவி யுள்ளவன் நானே. ஆகா! இது ஓர் ஆச்சரியம் அல்லவா? ஆகவே என்னேயே நான் வணங்கு கிறேன்.

மேலும், உடலால் எதையும் தொடாமலே மிக நீண்ட நெடுங்காலமாக இந்த வையகத்தைத் தாங்கி வருகிறேன். ஆகா! என்னேப் போன்ற திறமை மிக்கவர் இங்கே யார் இருக்கிருர்கள்! ஆகவே என்னேயே நான் வணங்குகிறேன்.

எனக்கோ ஒன்றுமே இல்லே, அல்லது இந்த வாக்கு மனம் ஆகியவற்றுக்கு உட்பட்டவை அனேத்தும் என்னுடையவையே. இந்த அதிசய மான விந்தைகள் நிறைந்த என்னேயே நான் வணங்குகிறேன்.

அந்தோ இது என்ன கஷ்டம்! எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படையான காரணம் துவந்தம் எனப்படும் இரட்டைகளே ஆகும் இதற்கு மாற்று மருந்து ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. அது என்னவென்ருல், 'இங்கே காணப்படுவதெல்லாம் பொய். இரண்டற்ற, பரிசுத்த ஞானரஸமே நான்' என்ற ஞானம் உதிப்பதுதான் அதற்கு உரிய மருந்து. அதைத் தவிர வேறு எந்த ஔஷதமும் கிடையாது.

ஐயனே! இந்த உடல், சுவர்க்கம் நரகம், பந்தம் மோட்சம், பயம் ஆகிய எல்லாமே கற்பனே தான். இந்த உலகம், உடல் யாவுமே ஒன்று மில்லே. எல்லாம் தூய உணர்வுமயமான ஆத்மாவே என்ற அனுபவஞானம் உதித்தபின்பு எனக்கு இவற்றினுல் ஆவது என்ன? கற்பனேயும் தான் ஏது?

மேலும், எனக்கு உடல் இல்லே, உடலும் நானல்ல, ஜீவனும் நானல்ல, நான் ஞான சொருபமே. ஆனுல் இந்த வாழ்வும் ஆசையுமே இதுவரை எனக்குப் பந்தமாக இருந்தன. ஆகா! விந்தையிலும் விந்தையே! எல்லேயற்ற பெருங் கடலாகிய என்னிடமிருந்து, மனமாகிய காற்று எழும்பி வீசத் தொடங்கியவுடனே பலவிதமான உலக அலேகள் திடீரென்று எழும்புகின்றனவே! அதுவும் தவிர, கரைகாண முடியாத பரந்த கடலாகிய என்னிடம் தனிப்பட்ட ஜீவ அலேகள் இயல்பாகவே தோன்றி, மோதி விளேயாடி மறைந்துபோகின்றன! இது என்ன ஆச்சரியம்!

இவ்விதம் ஜனகன் தனது விசித்திரமான அனுபவத்தை வியப்போடு கூறினுன். ○

---

## ஒற்றுமை

கா. ஸ்ரீ. ஸ்ரீ.

எங்கும் பகை நீங்கி நட்பும் ஒற்றுமையும் வளர்க.

புதல்வன், தந்தை சொல்லேக் காக்கவேண்டும்; தாயின் கட்டளேயை நிறைவேற்றவேண்டும்.

மனேவி, கணவனிடம் அன்புடன், அமைதியாக, தேனினும் இனிமையாகப் பேச வேண்டும்.

உடன்பிறந்தவர்கள் ஒருவரை ஒருவர் பகைக்கலாகாது. அக்கா தங்கைகள் தங்களுக்குள் பொருமை கொள்ளக்கூடாது. அனேவரும் ஒரே கருத்துடன், ஒரே லட்சியத்துடன், இனிய முல்லேச் சிரிப்புடன், மங்கலமாக முன்னேற வேண்டும்.

மக்கள், தலேவனேத் தேர்ந்தெடுத்து, அவனே விட்டுப் பிரியாமல் அவனுக்கு ஒற்றுமையுடன் உதவ வேண்டும். ஒருவரை ஒருவர் களிக்கச் செய்து, வாழ்வின் பொறுப்புச் சுமையைத் தாங்க வேண்டும்.

நல்லவர்கள் நிறைந்த நாட்டில், சுதந்திரமான கருத்துக்கள் இருந்தாலும், பரஸ்பர அன்பும் ஒற்றுமையும் ஓங்கி விளங்கும். தேவர்கள் ஒருங்கிணேந்த மனத்துடன் அமுதகலசத்தைக் காப்பது போல, உயர்ந்த குடிமக்கள் அல்லும் பகலும் ஒற்றுமையுடன் நாட்டைக் காக்கப் பேரவையில் கூடுவார்கள்.

—பைப்பலாத ஸம்ஹிதை, 5-19.




# ராஜகவி

'நாடோடி'

போஜ அரசனுடைய ராஜகவி ஒரு நாள் நல்ல நடுப்பகல் வெயிலில் சென்றுகொண்டிருந்தார். வெயில் மிகக் கடுமையாகக் காய்ந்துகொண்டிருந்தது. அந்த வெயிலில் யாரோ ஒருவர் காலில் செருப்பு இல்லாமல் தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருந்தார். அவரால் சூடு பொறுக்க முடியவில்லை.

அதைக் கண்ட ராஜகவி தம் செருப்புக்களைக் கழற்றி அவரைப் போட்டுக் கொள்ளச் சொல்லிவிட்டுத் தாம் அந்த வெயிலில் நடக்க ஆரம்பித்தார்.

ஆனால் அந்தச் சமயமென்று அரசனின் யானையை மாவுத்தன் அந்தப் பக்கமாக ஓட்டிக்கொண்டு வரவே, ராஜகவி பூமியின் சூடு பொறுக்காமல் யானைமீது ஏறிக்கொண்டார்.

அப்பொழுது போஜராஜன் தன் இரதத்தில் அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்தான். யானைச் சவாரி செய்துகொண்டிருந்த தன் கவியைப் பார்த்து, ''தங்களுக்கு யானைச் சவாரி எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டான்.

கவி சொன்னார், ''நான் செய்த தானத்தின் மகிமை இது'' என்று.

''என்ன தானம் செய்தீர்கள்?''

''என் பழைய கிழிந்த செருப்புக்களை ஒருவருக்குத் தானமாகக் கொடுத்தேன். அதன் பலன் எனக்கு உடனே யானைச் சவாரி கிடைத்தது. தானம் என்றும் வீண்போகாது'' என்றார் ராஜகவி.

தானம் வீண்போகாது என்றதும் ஒரு பழைய கதை ஞாபகம் வருகிறது. இரண்டு பேர் தெருவில் ஒரு குருடனைப் பார்த்தார்கள். ஒருவன் குருடனுக்குப் பிச்சை கொடுத்தான். இன்னொருவன் பிச்சை கொடுக்காமலே போனான்.

அவர்கள் சிறிது தூரம் சென்றிருப்பார்கள். ஒரு யமதூதன் அவர்களுக்கு முன்னால் தோன்றினான். அவன் பிச்சை கொடுத்தவனைப் பார்த்து, ''உன் ஆயுள் இன்னும் ஐம்பது ஆண்டுகளுக்கு நீடிக்கும்'' என்றான். பிறகு அவன் பிச்சை கொடுக்காதவனைப் பார்த்து, ''நீ பிச்சை கொடுக்காததனால் உனக்குச் சீக்கிரமே மரணம் சம்பவிக்கப்போகிறது'' என்றான்.

''அப்படியானால் நான் உடனே திரும்பிப் போய் அந்தக் குருடனுக்குப் பிச்சை கொடுத்துவிட்டு வருகிறேனே!'' என்றான் பிச்சை கொடுக்காதவன்.

அதற்கு யமதூதன், ''இனி நீ போய்ப் பலன் இல்லை. படகுகளில் துவாரம் இருக்கிறதா என்று பயணத்திற்கு முன்புதான் பார்ப்பார்களே தவிர. நடுக்கடலில் பார்க்கமாட்டார்கள்'' என்று பதில் சொன்னான்.

# புலியாக வந்த பரமன்

த. காவேரி

பதினைன்காம் நூற்ருண்டில் ஜகந்நாதமித்திரர் என்ற உத்தம பக்தர் வாழ்ந்து வந்தார். அவர் பார்ப்பதெல்லாம் பரமனுக உணர்ந்த சாதுவாக விளங்கினர். பகவானின் நாமத்தை உச்சரித்துக்கொண்டே பிக்ஷையெடுத்து அவர் வாழ்க்கை நடத்தி வந்தார்.

ஜகந்நாதமித்திரரின் உயர்ந்த பண்பாடுகளைக் கண்டு மகிழ்ந்த மக்கள் அவருக்குச் சிறிது நிலம் கொடுத்தனர். ஆனல் அவர் கடவுள் சிந்தனையில் ஆழ்ந்திருந்ததனல் அவரது மனம் நிலத்தை உழுது பயிரிடும் நிலையில் இல்லை. எனவே மக்களே அவரது நிலத்தில் உழைத்து விளைச்சலை எடுத்து அவருக்குக் கொடுத்து வந்தனர்.

இந்த நிலையில் ஒரு சமயம் சுல்தானின் சுபேதாராக ஒரு பேராசைக்காரன் அந்தக் கிராமத்திற்கு வந்தான். அவன் ஜகந்நாதமித்திரரின் நிலத்தை எப்படியாவது கவர்ந்துகொள்ளத் திட்டம் தீட்டினன்.

ஆகவே ஒரு நாள் அவன் ஜகந்நாதமித்திரரிடம் சென்று, ''நாளையதினம் என் மகளுக்குத் திருமணம் நடைபெற இருக்கிறது. எங்கள் குல ஆசாரப்படி, திருமணத்தின்போது மணமகளுக்கு அருகில் ஒரு வேங்கைப் புலி இருக்கவேண்டும். ஆதலால் தாங்கள் நாளையதினம் ஒரு புலியுடன் அவசியம் என் வீட்டிற்கு வர வேண்டும். தவறினல் உங்களைச் சிறையில் தள்ளுவேன். அத்துடன் உங்கள் நிலத்தையும் அரசாங்கம் எடுத்துக்கொள்ளும்'' என்று சொல்லி மிரட்டினன்.

சூதுவாது தெரியாத ஜகந்நாதமித்திரர் சுபேதார் கூறியதைக் கேட்டதும், 'திருமணத்தின்போது மணமகளின் அருகில் ஒரு புலி இருப்பது சுபேதார் குல ஆசாரம் போலும்' என்றே நம்பிவிட்டார். அவர் சுபேதாருக்கு உதவ வேண்டும் என்றும் நினைத்தார்.

மறுநாள் காலையில் ஜகந்நாதமித்திரர், ''பகவானே! எனக்கு ஏற்பட்டிருக்கும் இந்த இக்கட்டிலிருந்து தாங்கள்தாம் என்னை விடுவிக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்துவிட்டு, கிராமத்தின் அருகில் இருந்த வனத்திற்குச் சென்ருர்.

வனத்தில் அவர் ஒரு புலியைக் கண்டார். அது அவருக்குப் பாண்டு ரங்கனுகக் காட்சி தந்தது. அதைப் பார்த்ததும் ஜகந்நாதமித்திரர், ''வாசுதேவா! நாம் சுபேதார் வீட்டுத் திருமணத்திற்குப் போகலாம்'' என்று சொல்லிக்கொண்டே, புலியைச் சுபேதார் வீட்டிற்கு அழைத்து வந்தார்.

உறுமிக்கொண்டே வீட்டை நோக்கி வந்த புலியைக் கண்டதும் சுபேதாருக்கு உதறல் எடுத்தது. பயந்துபோன அவன் வீட்டுக்குள் ஓடிச்சென்று கதவைத் தாழிட்டுக்கொண்டான். ஆனல் புலியோ கதவை உடைத்துக்கொண்டு வீட்டுக்குள் பாய்ந்தது.

சுபேதார் நடுநடுங்கி ஜகந்நாதமித்திரரின் திருவடிகளை இறுகப் பற்றிக் கொண்டான். தான் அறியாமல் பேராசை காரணமாகச் செய்த தவற்றை மன்னிக்கும்படி வேண்டினன். அவனை மன்னித்துவிட்டு ஜகந்நாதமித்திரர் புலியை அழைத்துக்கொண்டு வனத்திற்குச் சென்ருர்.

பக்தனைக் காக்கப் பரமனே புலியாக வந்தான். இது போன்ற எத்தனை எத்தனையோ நிகழ்ச்சிகள் மகான்களின் வாழ்க்கையில் உண்மையாகவே நடைபெற்றுள்ளன.

# பிரம்மசரியம்

'தேவாநாம் பிரியன்'

யோக வாழ்க்கைக்கான ஆரம்பக் கட்டுப் பாடுகள் யமம், நியமம் என்று பதஞ்சலி யோக சூத்திரத்தில் கொடுத்துள்ளார். யமம் என்பது வெளிப்படையான கட்டுப்பாடுகள்; அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரம்மசரியம், அபரிக் கிரகம் என்று குறிப்பிட்டுள்ளார்.

'சர' என்றால் 'நடைபோடுதல்' என்று பொருள். பரம்பொருளை நோக்கி நடைபோடுதல் பிரம்மசரியம் என்பதாம். எல்லா நிலைகளிலும் உடல், மனம், புத்தி இவற்றைக் கட்டுப்படுத்தி ஆண்பெண் சேர்க்கையைத் தவிர்த்தலே பிரம்ம சரியம். இந்த நிலையில் இருந்துகொண்டு பரம் பொருளில் மனதைச் செலுத்துதல் பிரம்ம சரியமாகும்.

இந்திரியங்கள் எப்பொழுதும் வெளிமுக மானவை. அவை மனதையும் புத்தியையும் விஷயசுகங்களுக்கு இட்டுச் செல்லும். எனவே புலன்களின் கவர்ச்சியிலிருந்து மனதை விடு வித்துப் புத்தியின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டு வருவது பிரம்மசரியம்.

புலனடக்கம் என்பது மனம் வாக்கு உடல் ஆகிய மூன்று நிலைகளிலும் ஏற்பட வேண் டும். பஞ்சேந்திரியங்களைக் கட்டுப்படுத்திவிட்டு மனதை மட்டும் விஷயசுகங்களில் ஊடுருவ விட்டோமானால் அது பிரம்மசரியம் ஆகாது. ஆகையினால் சொல் செயல் எண்ணம் என்ற மூன்றிலும் இதைக் கடைப்பிடிக்க வேண்டும்.

பிரம்மசரியத்தை ஸ்தூலம், சூட்சுமம் என இரு வகையாகக் கூறலாம். உடல் அடக்கத்தைக் காப்பது ஸ்தூலம். மன அடக்கத்தைக் காத்துக் கெட்ட எண்ணங்கள் உள்ளே வராமல் தடுப்பது சூட்சுமப் பிரம்மசரிய நிலையாகும். சூட்சும நிலையைக் கடைப்பிடிப்பது ஸ்தூலத்தைவிட மிகக் கடினம். ஆனாலும் தீவிரப் பிரம்மசாரிகள் சூட்சுமப் பிரம்மசரியத்தையே மேலான குறிக் கோளாகக் கொள்ள வேண்டும்.

உடல் மனம் ஆன்மா ஆகிய மூன்றையும் நல்ல நிலையில் வைத்திருக்க உதவுவது பிரம்மசரியம். ஆற்றல் நிறைந்த பிரம்மசரிய விரதத்தைக் காப்பது எளிதான காரியமல்ல. அது உடல் அடக்கத்தில் தொடங்கி, எண்ணம் செயல் இறைவன் என்ற நிலை வரையில் சென்று பூரணத்துவம் அடைகிறது.

இறைவனிடம் பரிபூரண சரணாகதி அடைவது என்பது ஒரு பிரம்மசாரியால் மட்டுமே முடியக்கூடியது.

### பிரம்மசரியத்தின் மகிமை

லௌகிக முன்னேற்றம், ஆன்மிக முன் னேற்றம், நீண்ட ஆயுள் இவற்றுக்கெல்லாம் ஆதாரமாக இருப்பது பிரம்மசரியமே. ஞானி களும் யோகிகளும் பிரம்மசரியத்தின் மூலமாகவே பிரம்மத்தை அடைய முயலுகின்றனர். மோகம், காமம், குரோதம், லோபம் முதலிய தீய எண்ணங்களை அழிக்கும் ஆயுதமாக இது விளங்கு கிறது.



அச்சமின்மை, மனவுறுதி, துணிவு, ஒளி, ஆன்மசக்தி, வலிமை முதலிய குணங்களே வீரியம் எனப்படுகின்றன. புலனடக்கத்தினால் வீர்யம் பெருகி ஓஜஸ்ஸாக மாறுகிறது. இதனால் பிரம்மசாரி அஞ்சா நெஞ்சத்துடன் துணிவு கொண்டு, பொறுமை நிறைந்து, உறுதிபெற்று, ஒளியுடன் திகழ்கிறான். புலனடக்கம் இல்லாத வர்களிடம் வலிமை வேண்டுமானால் காணப்பட லாம்; ஆனால் மற்றச் சிறப்புக் குணங்கள் இருப்பதில்லை.

### ஊர்த்துவ ரேதஸ்

நமது உடம்பில் இருக்கிற ஆற்றல் கர்மேந்திரியங்கள் மூலமாக வெளிப்படுகிறது. ஜீவசக்தியின் இருப்பிடம் மூலாதாரமாகும். அந்த ஜீவசக்தி விந்துவடிவில் வெளிச்சென்று கருவாக மாறிக் குழந்தையாக வளர்ந்து மனிதனுகவும் மாறுகிறது. அவ்வளவு ஆற்றல் படைத்த அதே ஜீவசக்தியை யோகசாதகர்கள் உள்முகமாகத் திருப்பிவிட்டுப் புறமுதுகில் செல்லும் சூட்சும நாடியாகிய சுஷும்ன நாடி மூலமாகச் சிரசில் இருக்கும் சகஸ்ரதளம் என்னும் சக்கரத்திற்குத் தட்டி எழுப்புகின்றனர். இந்தச் சாதனையைக் குண்டலினி யோகம் என்கின்றனர். மூலாதாரத்தில் இருக்கிற ஜீவசக்தி சகஸ்ரதளத்தை நோக்கிப் பாயும்பொழுது அதை 'ஊர்த்துவ ரேதஸ்' என்று அழைக்கின்றனர்.



இந்தச் சக்தி சகஸ்ரதளத்தில் பாய்ந்து அங்கு வெடிக்கும்பொழுது ஏற்படுகிற ஒளிபொருந்திய அணுசக்தி, சரீரம் மனம் புத்தி ஆகிய மூன்று உறுப்புக்களுக்கும் எல்லையற்ற வலிமையையும் ஆற்றலையும் அளிக்கிறது. இந்த உள்ளொளியையே 'ஓஜஸ்' என்கிறோம். ஓஜஸ் என்பது ஆன்மசக்தியாகும். இவ்வாறு வீரியத்தை ஓஜஸ்ஸாக மாற்றும் சக்தி வாய்ந்தவரே ஊர்த்துவரேதஸ் வாய்ந்த யோகியாவார்.

### வீரியம் ஓஜஸ்ஸாக மாறும் விதம்

வீரியம் ஸப்த தாதுக்களின் சாரமாக, பாலில் வெண்ணெய் பரவியிருப்பது போல், உடலில் எங்கும் பரவியுள்ளது. பீஜகோளங்களில் இருக்கும் கண்ணறைகள் மூலமாக இரத்தத்திலிருந்து துளித் துளியாக வீரியம் சேகரிக்கப்படுகிறது. எண்பது சொட்டு இரத்தத்திலிருந்து ஒரு சொட்டு வீரியம் தயாரிக்கப்படுவதாக நமது ஆயுர்வேதம் கூறுகிறது.

இத்தகைய சக்தி வாய்ந்த வீரியத்தை, யோகிகள் கண்ணறைகளால் வீரியம் தயாரிக்கப் படுவதையே தடுத்துவிடுகின்றனர். பரிசுத்தமான எண்ணங்கள், உபாசனை, வாக்கு, செயல், யோகசித்தி இவற்றினுல் வீரியம் தயாராகும் இடத்திலேயே சுத்தீகரிக்கச்செய்து, கீழ்நோக்கிச் செல்லும் வீரியத்தை மேல்நோக்கிச் செல்லும் ஓஜஸ் என்ற தெய்வசக்தியாக மாற்றி, மூளையில் சேமித்துவிடுகின்றனர்.

ஆன்மசாதனைக்கும் தியான காலங்களுக்கும் இந்த ஓஜஸ் சக்தியை யோகிகள் பயன்படுத்துகின்றனர். இத்தகைய ஓஜஸ்ஸைச் சேமித்து வைத்துள்ளவனின் உடல் ஒருவித இனிய மணத்தையும் ஒளியையும் பெறுகிறது.

### பிரம்மசாரியின் தன்மை

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், ''முறையாகப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு விந்துதாரணை செய்து பிரம்மசரியத்தை அனுஷ்டிக்கிறவனுக்கு, மேதை என்ற நாடி ஒன்று சரீரத்தில் உண்டாகிறது. தத்துவத்தை உள்ளபடி தெரிந்து கொள்ளும் தகுதி அத்தகையவனுக்கு வருகிறது. ஞாபகசக்தியும் அவனுக்கு அதிகரிக்கிறது. பிரம்மஞானம் அடைவதற்கு நைஷ்டிகப் பிரம்மசரியம் முற்றிலும் அவசியம்'' என்று கூறியுள்ளார்.

ஒரு துளி வீரியம்கூட வெளிவிடாமல் காத்து வரும் பிரம்மசாரியை 'அகண்டப் பிரம்மசாரி' என்பர். இவர்களுக்கு இயல்பாகவே சமாதிநிலை கைகூடும். ஆனுல் இத்தகைய அகண்டப் பிரம்மசாரியைக் காண்பது அரிது. இவர்களுக்கு மனம் பிராணன் ஆகிய இரண்டும் அடங்கி வசமாகும்.

பிரம்மசாரிக்கு நோய் ஏற்பட்டாலும் விரைவில் குணம் அடைந்துவிடுவான். இவன் கண்கள் ஒளியுடனும் குரல் இனிமையுடனும் திகழும். இவனது முகத்தில் ஒரு தெய்விகச் சாந்தி ஒளிரும்.

### பிரம்மசரியத்தைக் காக்கும் முறை

பிரம்மசாரி எப்பொழுதும் விழிப்புடன் இருந்து தனது எண்ணத்தில் சலனங்கள் ஏற்படாமல் காக்க வேண்டும். தீய எண்ணங்கள் மனதில்

நுழையும்போதே அது ஸ்தூல சரீரத்திற்கு மாற விடாமல் தடுத்து நிறுத்த வேண்டும். இதற்குத் திட சித்தமும் வைராக்கியமும் இருந்தால்தான் முடியும்.

திடமான பிரார்த்தனை, ஆன்ம சிந்தனை, ஸத்ஸங்கம், இடைவிடாத ஜபம், தியானம், பாராயணம் முதலியவற்றைக் கடைப்பிடித்து மனதை அடக்கி, தீய எண்ணங்கள் தோன்றும் இடத்திலேயே அழித்துவிட வேண்டும். மனம் அடங்கினால் வீரியம் தானே அடங்கும்.

மனம் அடங்க, தினமும் குறைந்தது ஆயிரத் தெட்டு முறையோ அல்லது அதற்கு அதிக மாகவோ காயத்திரி ஜபம், பிரணவ ஜபம், பஞ்சாட்சர ஜபம் போன்றவற்றை இடை விடாமல் செய்ய வேண்டும். ஜபத்தை விடாமல் செய்துகொண்டே வந்தால் நிச்சயம் புலனடக்கம் ஏற்பட்டு மனதைக் கட்டுப்படுத்த முடியும். இதை அவரவர் தங்கள் அனுபவத்திலும் உணரலாம்.

**பிரம்மசாரியின் உணவுமுறை**

பிரம்மசரியத்திற்கும் உண்ணும் உணவிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பிரம்மசரியத்தைக் கடைப்பிடிப்பவர்கள் உணவில் சில விதிமுறை களைக் கட்டாயம் பின்பற்ற வேண்டும். பிரம்ம சாரி வயிறு நிறைய உண்பது கூடாது. வயிற்றில் உணவிற்கு இரண்டு பகுதியும், தண்ணீருக்கு ஒரு பகுதியும், காற்றிற்கு ஒரு பகுதி யும் இடம் இருக்கும்படி விடவேண்டும். மிதமான உணவு, சாத்துவிக உணவு, குறைந்த நேரத் தூக்கம் இவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். ஏகாதசி, சிவராத்திரி, பிரதோஷம் போன்ற காலங்களில் வெறும் நீரை மட்டுமே அருந்தி உபவாசம் இருக்க வேண்டும்.

உபவாசம் காமத்தை அடக்கும்; இந்திரி யத்தை அடக்கும்; மனதில் ஏற்படும் சலனத்தை அழிக்கும். உபவாசமும் மௌன விரதமும் பிரம்மசரியத்திற்கு உதவும் மிகப் பெரிய தவமாகும்.

அதிக உப்பு, அதிகக் காரம், அதிகப் புளிப்பு, மாமிசம், எண்ணெய்ப் பண்டங்கள் போன்ற வற்றை நீக்க வேண்டும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் முற்றிலும் காம காஞ்ச னத்தைத் துறந்தவரானதனாலேயே பரமஹம்ஸ ராகத் திகழ்ந்தார். தனிமனிதனின் ஆன்ம சாதனைக்கு மட்டுமல்லாமல் சமுதாயத்தை உருவாக்குவதற்கும் பிரம்மசரியம் மிகவும் இன்றியமையாதது. இதனை உணர்ந்தே காந்தி யடிகள் பிரம்மசரியத்தைக் கடைப்பிடித்து அரிய சாதனைகளைப் புரிந்தார்.

பிரம்மசரியம் என்பது இல்லறத்தில் உள்ளவர் களும், ஆன்மிகச் சாதனையில் ஈடுபட்டிருப்பவர் களும் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறையாகும். இல்வாழ்க்கையில் ஒரு குறிப்பிட்ட நிலையைக் கடந்த பிறகு கணவன் மனைவி இருவரும் பிரம்ம சரியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிட்டுள்ளார்.

அது போல் உயர்ந்த லட்சிய வாழ்க்கை வாழ்பவர்களும் தங்களது உடல் மனம் புத்தி ஆகியவற்றை உலகாயத விஷயங்களில் செல்லா மல் தடுத்து, இலட்சியப் பாதையில் திருப்பி விடுவதற்குப் பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக் கின்றனர்.

நைஷ்டிகப் பிரம்மசரியத்தின் சக்தியை வெளிக் காட்டியுள்ள ஆற்றல் படைத்த பீஷ்மர், ஆஞ்சநேயர், லக்ஷ்மணன் போன்ற புராண புருஷர்களை நாம் புராதன இலக்கியத்தில் காண்கிறோம்.

நவீன காலத்திலும் சுவாமி விவேகானந்தர் போன்ற மகாபுருஷர்களை வரலாறு கண்டுள்ளது.

எனவே செயற்கரிய செயல்களைச் செய்த பெரியவர்கள் அனைவரும் பிரம்மசரியத்தைக் கடைப்பிடித்தவர்களே என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். ○

---

சத்தியத்தை ஒரு கல்லுக்கும், பொய்யை ஒரு மண்பானைக்கும் ஒப்பிடலாம். மண்பானைமேல் கல்லை விட்டெறிந்தால் பானை உடைந்துவிடும். கல்லின் மேல் பானை விழுந்தாலும் உடைந்துவிடும். எப்படி இருந்தாலும் கஷ்டத்திற்கு உள்ளாவது பானையே. —சீக்கிய உபதேசமொழி

# இணைப்புக்குக் காரணம்

கி. வா. ஜகந்நாதன்

காரைக்கால் அம்மையார் இப்போது உமா தேவியைப் பார்க்கிறார். மற்றவர்களெல்லாம் தம் தேவிமார்களை நாவிலும் மார்பிலும் அருகிலும் வைத்திருக்கச் சிவபெருமான் தன்னுடைய திரு மேனியில் ஒரு பாதியையே அந்தப் பெருமாட் டிக்கு வழங்கியிருக்கிறான். மாதிருக்கும் பாதியனாக உள்ள அவன் எப்போதும் அவளோடு இணைந்து ஒட்டி விளங்குகிறான். இந்த ஒட்டுறவைப் பற்றிய எண்ணம் அம்மையாருக்கு எழுகிறது.

இறைவனோடு பல வகையில் உரையாடும் இயல்புள்ள அம்மையார் உமாதேவிக்கும் எம் பெருமானுக்கும் உள்ள இணைப்பைப் பற்றி இப்போது சொல்கிறார். இறைவனை நோக்கி வினாவும் முறையில் ஒரு பாட்டைப் பாடுகிறார்.



இறைவனை அவனுடைய வாகனத்தை முன்னிட்டு விளிக்கிறார். திருமால் இறைவனுக்கு வாகனமாக, விடைவடிவத்தில் விளங்குகிறான். திருமால், 'மஞ்செனத் திரண்ட மேனி' உடைய வன். மஞ்சு-மேகம். மேகத்தைப் போன்ற நிறத்தையுடைய திருமாலைத் தன்னுடைய ஊர்தி யாகிய இடபமாகக் கொண்டவன் இறைவன். இந்த அடையாளத்தைக் கூறி விளக்கினார்.

மஞ்சுபோல் மால்விடையாய்!

'தேவிமாரைப் படைத்தவர்கள் அவர்களுக் காகத் தனியே அந்தப்புரத்தைக் கட்டி அதிலே இருக்கச் செய்வார்கள். நெருங்கியிருக்க வேண்டு மானால் அருகே அமரச் செய்வார்கள். பின்னும் நெருக்கம் வேண்டினால் தம் நாக்கிலும் மார்பிலும் வைத்துக்கொள்வார்கள். ஆனால் நீ அவளுக்கு உன் திருமேனியில் ஒரு பாதியையே வழங்கியிருக் கிறாய். அவளும் நீயும் சேர்ந்து ஒருவடிவமாக இருக்கிறாய். இதற்குக் காரணம் என்ன?' என்று நினைத்துச் சொல்லத் தொடங்குகிறார்.

'அம்மையிடம் உனக்குள்ள சிறந்த காதலால், அவளை ஒருகாலும் பிரிந்திருக்கக் கூடாது என்று இப்படி ஒட்டிக் கிடக்கிறாயோ?' என்று முதலில் ஒரு வினாவை எழுப்புகிறார்.

விருப்பினால் நீ பிரியகில்லாயோ?

'அன்றி அவளைத் தனியே வைக்க வேண்டும் என்று விரும்பிப் பல இடங்களைத் தேடி நீ இல்லாத இடமே இல்லாமையால் வெளிப்படையாகவே இப்படி வைத்துக் கொள்ளலாம் என்று திரு வுள்ளம் கொண்டாயோ? உனக்கு வேறான இருப் பிடம் பிறிது ஒன்று இல்லையோ?'

வேறா
இருப்பிடம் மற்று இல்லையோ?

'மலைக்கு மகளாகப் பிறந்த பார்வதிதேவி உன்னைப் பிரிந்து தனியாக இருக்க அஞ்சு வாளோ? உன்னுடைய விருப்பம் காரணமாக இணைத்துக்கொண்டிருக்கலாம். அவளைப் பிரி யாமலே இருக்க வேண்டும் என்ற உன் காத லுணர்ச்சியே அவளோடு ஒட்டி இணைந்து நிற்பதற்குக் காரணமாக இருக்கலாம்; அல்லது அந்தப் பெருமாட்டி உன்னைப் பிரிந்து தனியாக இருப்பது அவளுக்கு அச்சத்தைத் தரலாம். உன் விருப்பம், இந்த இணைப்புக்குக் காரணமா? அல்லது அவளுடைய அச்சம் காரணமா? இதைச் சொல்ல வேண்டும்.'

பொருப்பன் மகள்
மஞ்சுபோல் மால்விடையாய்,
நிற் பிரிந்து வேறு இருக்க
அஞ்சுமோ? சொல்லாய், அவள்.

'ஒன்று, உன்னுடைய திருவுள்ளம் காரணமாக இந்த இணைப்பு அமைந்திருக்க வேண்டும்; அல்லது, அந்தப் பெருமாட்டியின் உள்ள நிலை காரணமாக அமைந்திருக்க வேண்டும். இந்த இரண்டில் எது உண்மையான காரணம்? இதை எனக்குச் சொல்லியருள வேண்டும்' என்று விண்ணப்பிக்கிறர் அம்மையார்.

'மேகம் போன்ற நிறத்தையுடைய திருமாலை விடையாகக் கொண்டவனே! நீ பார்வதியிடம் கொண்ட பெருங்காதலால் அவளைப் பிரியும் ஆற்றல் இல்லாதவனாக இருக்கிறயோ? அன்றி உன்னை விட்டு வேருக இருக்கும் இடம் பிறிது அவளுக்கு இல்லையோ? என்ன காரணம்? அந்தப் பார்வதி உன்னைப் பிரிந்து வேருக இருக்க அஞ்சுவாளோ? இதை எனக்குச் சொல்வாயாக.'

விருப்பினுல் நீபிரிய கில்லாயோ? வேரு
இருப்பிடம்மற்று இல்லையோ என்னே?
—பொருப்பன்மகள்
மஞ்சுபோல் மால்விடையாய்,
நிற்பிரிந்து வேறுஇருக்க
அஞ்சுமோ? சொல்லாய், அவள்.

[விருப்பு—காதல். பிரியகில்லாயோ — பிரிவதற்கு ஆற்றல் இல்லாமல் உள்ளாயோ? கில்—ஆற்றலைக் குறிக்கும் இடைச்சொல். வேரு—உன்னை விட்டு வேருக. மற்று—பிறிது; அசையாகவும் கொள்ளலாம். என்—என்ன காரணம்? ஓ: அசை. பொருப்பன் மகள்—இமாசல அரசனுடைய பெண்; பார்வதி. நிற்பிரிந்து—நின்னைப் பிரிந்து. பொருப்பன் மகளாகிய அவள்.]

''உன்னுடைய திருவுள்ளம் காரணமாகவோ, இறைவியின் உள்ளக் கிடக்கை காரணமாகவோ இந்த இணைப்பு அமைந்தது?'' என்று கேட்கிறர்.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 94-ஆவது பாட்டு.

புத்த ஜாதகக் கதை:

## அணில் கடைப்பிடித்த நெறி



காசி நாட்டில் இருக்கும் ஒரு சிறு கிராமத்தில் ஒரு காலத்தில் அணில் ஒன்று வசித்தது. ஊரின் நுழைவாயிலில் இருந்த ஆலமரத்துத் தேவதைக்குப் பலியிடுவதாக அது நேர்த்திக் கடன் செய்துகொண்டது.

பிறகு அது ஆலமரத்துப் பக்கம் வந்தபோது அனேக உயிர்களைப் பலியிட்டுத் தனது நேர்த்திக்கடனை நிறைவேற்றி அதிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டது.

அப்போது அங்கே இருந்த மரத்தேவதை கீழ்வரும் பாடலைப் பாடியது:—

''நேர்த்திக் கடனிலிருந்து விடுபடுவதற்காகப் பிற உயிரைக் கொலை செய்யும் எண்ணம் உங்களுக்கு வேண்டாம்.

இப்படி விடுபடுவது சரியான பந்தம் ஆகும்.

அறிஞர்களும் நல்லவர்களும் தங்களை இவ்வாறு விடுவித்துக்கொள்ள மாட்டார்கள்.

முட்டாள்களைப் போல இவ்வாறு விடுவித்துக்கொள்வது இறுதியில் பந்தமாகும்.''

இதன் பின்பு பிற உயிர்களை வதம் செய்வதை மக்கள் நிறுத்திக்கொண்டார்கள். நேர்மையாக ஒழுகி, தேவலோகத்தை அடைந்தார்கள்.

— 'நம்பி'



# இராமாயணம்

## இராவணன் பிறப்பு

'வால்மீகி'

இலங்காதிபதியான இராவணேசுவரனுக்கு அந்தப் பெயர் ஏன் ஏற்பட்டது? எப்படி ஏற்பட்டது? அது பெற்றோர் அவனுக்குச் சூட்டிய பெயரா? அல்லது மற்றவர் சூட்டிய பெயரா? மற்றவர் சூட்டிய பெயர் என்றால் பெற்றவர் சூட்டிய பெயர் என்ன? இராவணனுக்கு அந்தப் பெயர் ஏற்பட்ட காரணத்தை ஆராய்வோம்.

அரக்கர் குலத்தவனான சுமாலி, திருமாலுக்கு அஞ்சி, தனது ராஜ்யமான இலங்கையை விட்டுப் பாதாளத்தில் போய்ப் பதுங்கி வாழ்ந்துகொண்டிருந்தான். தன் குலத்தில் எப்படியும் ஒரு மாவீரனைத் தோற்றுவித்து அரக்கர் குலத்தின் பழைய பெருமையைத் திரும்பப் பெற வேண்டும் என்பது அவனது ஆவல்.

ஒரு சமயம் குபேரனை அவன் சந்தித்தான். குபேரனின் புஜபல பராக்கிரமமும் செல்வமும் தேஜஸ்ஸும் சுமாலியை மயங்கச்செய்தன. விசாரித்ததில் குபேரன் விச்ரவஸ் என்ற மகா தபஸ்வியின் பிள்ளை என்பது தெரிந்தது. இந்தத் தபஸ்வி பிரம்மாவின் பேரர், புலஸ்திய முனிவரின் மகன். கோரமான தவத்தினால் அக்கினியைப் போல ஜொலிப்பவர். அவருடைய மகிமையினால் தான் குபேரன் இத்தனை செல்வாக்குடன் விளங்குகிறான் என்பதைத் தெரிந்துகொண்ட சுமாலி, தன் மகள் கைகஸியை அழைத்து, ''மகளே! உன்னால்தான் நம் அரக்கர்குலம் பழைய பெருமையைத் திரும்பப் பெற வேண்டும். நீ யௌவனப் பருவத்தில் இருக்கிறாய். உன் அழகிற்கும் சாமர்த்தியத்துக்கும் பொருத்தமான கணவன் நம் குலத்தில் யாரும் இல்லை. பாதாளத்தில் மறைந்து வாழும் என்னால் உனக்கு உகந்த கணவனைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. பூவுலகில் விச்ரவஸ் என்ற மாமுனிவர் இருக்கிறார். தவ வலிமையில் அவருக்கு நிகர் யாருமில்லை. எப்படியாவது அவரை நீ மணந்து குழந்தைகளைப் பெற வேண்டும்'' என்று சொல்லி அனுப்பினான்.

தந்தையின் கட்டளைப்படி கைகஸி பூவுலகம் வந்து விச்ரவஸின் ஆசிரமத்தை அடைந்தாள். அந்தி மயங்கும் நேரத்தில் அவளைக் கண்டு மோகித்த முனிவர், ''நீ யாரம்மா?'' என்று விசாரித்தார். கைகஸி தனது வரலாற்றைச் சொல்லி, ''காமத்தீயினால் நான் வெந்து செத்துக் கொண்டிருக்கிறேன். உடனே என்னுடன் கூடாவிட்டால் இங்கேயே இப்பொழுதே செத்து மடிவேன்'' என்ற சாகசம் செய்தாள்.



''பெண்ணே! அந்திநேரம் அரக்கர்களின் நேரம். இந்த நேரத்தில் கூடினால் பிறக்கும் குழந்தை மகா பயங்கரமானதாக இருக்கும்'' என்று விச்ரவஸ் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். ஆனால் கைகஸி கேட்கவில்லை. யோசித்துப் பார்க்க முனிவருக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுத்தாலும் அவர் மனம் மாறிவிடுவா

றென்று அவள் பயந்தாள். எனவே கூடத்தகாத நேரத்தில் அவர்கள் கூடினர்கள்.

''பெண்ணே! என்னைக் கட்டாயப்படுத்தி, தகாத நேரத்தில் நீ கூடினமையால் இந்த உலகத்தையே நடுநடுங்கச் செய்யும் அதிபயங்கரமான குழந்தைகள் உனக்குப் பிறப்பார்கள்'' என்று சொன்னர் விச்ரவஸ்.

''எனக்கு நல்ல பிள்ளையாக ஒரு மகனவது பிறக்க வேண்டும்'' என்று கைகஸி பிரார்த்திக்க, ''உனக்குப் பிறக்கும் கடைசிப் பிள்ளை நல்லவனகவும் நல்லொழுக்கமுடையவனகவும் இருப்பான்'' என்று அருள்பாலித்தார் விச்ரவஸ்.

இதன் பிறகு முதலில் பிறந்தான் ஒரு குழந்தை. அந்தக் குழந்தை கொள்ளிக்கட்டை போன்ற கண்களும், பத்துத் தலைகளும், இருபது தோள்களும், நீண்ட கோரப்பற்களும், பயங்கரப் பார்வையும் உடையதாக இருந்தது. அந்தக் குழந்தை பிறக்கும்பொழுதே பூகம்பம் ஏற்பட்டது. கடல்கள் கொந்தளித்தன. அந்தக் குழந்தையைப் பார்த்ததும் தாய் கைகஸியே பயந்தாள்.

''பயப்படாதே கைகஸி! பத்துத் தலைகளுடன் பிறந்ததனல் இவனுக்கு, தசக்ரீவன் என்று பெயரிடுகிறேன். உன் பயம் நீங்க, இவனுடைய கோர ஸ்வரூபமும் பத்துத் தலைகளும் இருபது கைகளும் மறைந்து அழகான குழந்தையாவான். உன் முன்னிலையிலும் அந்தப்புரத்திலும் இவன் ஆனைழகனகை விளங்குவான். மற்ற இடங்களில் தசக்ரீவனக இருப்பான்'' என்று விச்ரவஸ் கூறினர்.

அதன்படியே அந்தப் பயங்கரமான குழந்தை உடனே அழகான குழந்தையாக மாறியது. இதன் பிறகு கும்பகர்ணனும் சூர்ப்பணகையும் பிறந்தார்கள். கடைசியாக விபீஷணன் பிறந்தான். விபீஷணன் பிறந்தபொழுது அவன் தர்மாத்மாவாக விளங்கப்போகிருன் என்பதற்கு அடையாளமாக நல்ல சகுனங்கள் தென்பட்டன.

இப்படியாக இராவணனுக்கு அவனுடைய தந்தை வைத்த பெயர் தசக்ரீவன் அதாவது பத்துத் தலையன். பத்துக் கழுத்துக்கள் இருந்ததனல் தசகண்டன், தசானனன் என்ற காரணப் பெயர்களும் வழங்கி வந்தன. இராவணன் என்ற பெயர் சிவபெருமான் வைத்த பெயர் ஆகும்.

# செய்திகள்

* பேலூர், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் இந்த ஆண்டு நடைபெற்ற நவராத்திரி விழாவில் சுமார் 7 லட்சம் பக்தர்கள் கலந்துகொண்டனர். மடத்திலிருந்து 5 கிலோ மீட்டர் தூரத்திலேயே பஸ், கார் போன்ற வாகனங்கள் நிறுத்தப்பட்டன.

நவராத்திரி அஷ்டமிதினத்தில் சுமார் 7 லட்சம் மக்கள் தரிசனத்திற்கு பேலூர் மடத்திற்கு வந்தது இதுவே முதல் தடவை ஆகும். அன்று 40,000 மக்களுக்குப் பிரசாதம் விநியோகிக்கப்பெற்றது.

* பெரம்பூர், விவேகானந்தர் நூற்றுண்டு மண்டபத்தில் அக்டோபர் 10-ஆம் நாள் ஸ்ரீராமகிருஷ்ண சேவா சங்கத்தின் சார்பாக 'ஸ்ரீராமகிருஷ்ணர் விழா' விமரிசையாகக் கொண்டாடப்பெற்றது.

சுவாமி தன்மயானந்தர் தலைமை வகித்துத் தலைமையுரை வழங்கினர். அன்னதான சமாஜத்தின் செயலாளர் ஆர். பாலசுந்தரம் சிறப்புரையாற்றினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் பற்றிய கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்ற 250 மாணவ மாணவிகளுக்கு விழாவில் சுழல் கேடயமும் பரிசுகளும் வழங்கப்பெற்றன.

* சென்னை, சாலிக்கிராமத்தில் உள்ள ஸ்ரீ சேவா மந்திரில் அக்டோபர் 17-ஆம் நாள் மாலை 5-30 மணிக்கு, 'தெய்விக வாழ்க்கை' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரை நிகழ்த்தினர்.

* ஒரிஸாவில் வெள்ளத்தில் பாதிக்கப்பட்ட பகுதிகளில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் நிவாரண வேலைகளை மேற்கொண்டது. செப்டம்பர் 10 முதல் 17 முடிய ஒவ்வொரு நாளும 8 கிராமங்களில் 3000 மக்களுக்கு உணவுப் பொட்டலங்கள் வழங்கப்பட்டன. 400 வேட்டிகளும் 400 புடைவைகளும் பெரிதும் பாதிக்கப்பட்ட மக்களிடையே விநியோகிக்கப்பட்டன.

* கோயம்புத்தூர் அன்பர்கள் ''திரு என். கிரிதாரி பிரசாத, கீதா ஹவுஸ், 52, தேவாங்கு ஹைஸ்கூல் ரோடு, கோயம்புத்தூர்—641002'' என்ற முகவரியிலும் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் சந்தாவைச் செலுத்தலாம். அல்லது வழக்கம் போல் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயத்திற்குச் சந்தாவை நேரடியாக அனுப்பலாம்.




# பிராந்தன் கதை

சுவாமி அமரானந்தர்

கேரளத்தில் நாராயண பிராந்தன் என்ற ஒரு பக்தர் வாழ்ந்து வந்தார். பிராந்தன் என்ற சொல்லுக்குப் பித்தன் என்பது பொருள்.

நாராயண பிராந்தன் பார்ப்பவர்களுக்கு ஒரு பைத்தியக்காரனைப் போலவே தென்பட்டார். சுடுகாட்டையே அவர் தமது இருப்பிடமாகக் கொண்டு அங்கேயே வசித்தார். பிணங்கள் எரிந்துகொண்டிருக்கும் இடத்தில் அமர்ந்து அவர் ஆழ்ந்த தியானத்தில் இருப்பார்.

ஒரு நாள் இரவு பிராந்தன் வழக்கம் போல் மயானத்தில் இருந்தார். அப்போது மயான தேவதையின் தோழிகள் அங்கே வந்தார்கள். அவர்கள், ''எங்கள் தலைவி இன்று இரவு இந்தச் சுடுகாட்டிற்கு வரப்போகிருள். அவள் பயங்கர மான வடிவம் கொண்டவள். ஆகவே இந்த இடத்தை விட்டு ஓடிப் போய்விடு'' என்று சொல்லிப் பிராந்தனை எச்சரித்தார்கள்.

ஆனுல் பிராந்தன் சிறிதும் பயமின்றி, ''யார் வேண்டுமானுலும் வரட்டும். நான் இந்த இடத்தை விட்டு நகர முடியாது'' என்று பதில் கூறிவிட்டு அங்கேயே அசையாமல் அமர்ந்து கொண்டார்.

நள்ளிரவு வந்தது. மயானதேவதையான காளிதேவி அண்டங்களெல்லாம் கிடுகிடுவென்று அதிரும்படியான ஆர்ப்பாட்டங்களுடன் அங்கே தோன்றினுள். நாராயண பிராந்தன் முன்னிலை யில், அவரைப் பயப்படுத்துவதற்காகத் தன் ஆற்றலை எல்லாம் திரட்டி ஆரவாரம் செய்தாள்.

காளிதேவியின் ஆரவாரம் காரணமாக அண்டங்களெல்லாம் அசைந்து ஆட்டம் கண்டன. ஆனுல் பிராந்தனே சிறிதுகூடப் பயமின்றிக் காளிதேவியின் எல்லா ஆர்ப்பாட்டங்களையும் அமைதியாக வேடிக்கை பார்த்துக்கொண்டிருந் தார்.

தேவியின் எல்லா ஆட்டங்களும் முடிந்தபிறகு அவளைப் பார்த்து, பிராந்தன், ''இதுதானு உன் பொம்மலாட்டம்? இன்னும் இருக்கிறதா?'' என்று வினவினுர்.

பிராந்தனின் அச்சமின்மையைக் கண்டு தேவிக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. எனவே அவருக்கு ஒரு வரம் கொடுக்க விரும்பிய தேவி, ''உனக்குத் தேவையான வரத்தை என்னிட மிருந்து கேட்டுப் பெற்றுக்கொள்'' என்று பிராந்தனிடம் கூறினுள். அதைத் தொடர்ந்து அவர்களுக்கிடையில் பின்வரும் உரையாடல் நடைபெற்றது—

பிராந்தன்: தேவி! எனக்கு எந்த வரமும் வேண்டியதில்லை.

காளிதேவி: நான் யாருக்குத் தரிசனம் கொடுக்கிறேனே, அவர்களுக்கு ஒரு வரம் கொடுத்தே ஆகவேண்டும். ஆகையால் உனக்கு இஷ்டமான வரத்தைத் தயங்காமல் கேள்.

பிராந்தன்: அப்படியானுல் என் இடக் காலில் உள்ள வீக்கத்தை வலக் காலுக்கு மாற்றிக் கொடு.

காளிதேவி: அது இயலாத காரியம். ஆகவே வேறு ஏதாவது கேள்.

பிராந்தன்: எனக்கு வேறு எதுவும் வேண்டிய தில்லை. தாயே! நீ வந்த வழியே செல்வாயாக.

ஆசை அற்றவர்களுக்கு அச்சம் இல்லை; எந்தச் சக்தியும் அவர்களை எதுவும் செய்ய முடிவ தில்லை என்பது இந்தக் கதையின் மூலம் விளங்குகிறது. ○

# விவேகானந்தரின் நிலைமை

ஏ. சுப்பிரமணியம்

சுவாமி விஞ்ஞானனந்தர் ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர்ச் சீடர்களில் ஒருவர். பிறகு ஸ்ரீராம கிருஷ்ண மடம்—சங்கத்தின் தலைவராகவும் அமர்ந்தவர். அவர் பொறியியலில் பட்டம் பெற்றவர். இன்று உலக மக்கள் கண்டு போற்றும் பேலூர் ஸ்ரீராமகிருஷ்ணர் ஆலயத்தை, சுவாமி விவேகானந்தர் இவருடைய துணையுடனே வடிவ அமைப்புச் செய்தார். அதைக் கட்டி முடிக்க, சுவாமிஜி (விவேகானந்தர்) உயிரோடு இல்லை. விஞ்ஞானனந்தரே அதைக் கட்டி முடித்தார். அவருக்கு விவேகானந்தரிடம் மிகுந்த பக்தியும், அதே நேரத்தில் ஒருவிதப் பயமும் இருந்து வந்தன.

விவேகானந்தர் மேல்நாடுகளிலும் இந்தியாவிலும் நூற்றுக்கணக்கான சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். இதனல் அவர் ஆண்களோடும் பெண்களோடும் நெருங்கிப் பழக நேர்ந்தது.



விவேகானந்தர் பெண்களோடு பழகுவது ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசத்திற்கு நேர்மாருக இருப்பதுபோல் விஞ்ஞானனந்தருக்குத் தோன்றியது. பல முறை இதுபற்றி அவர் சிந்தித்தார். விடை கிடைக்கவே இல்லை.

விஞ்ஞானனந்தர் எல்லோரோடும் நெருங்கிப் பழகமாட்டார். அதுவும் பெண்களோடு அறவே பழகமாட்டார். அவருடைய இந்தப் பழக்கத்தைப் பற்றி விளையாட்டாக, ''மடத்தில் அவர் இருந்த அறைக்குள் கொசுக்களில்கூடப் பெண்கொசு உள்ளே நுழைய முடியாது'' என்று கூறுவார்கள்.

நெடுநாள் விவேகானந்தர் பெண்களோடு நெருங்கிப் பழகுவதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்த விஞ்ஞானனந்தர் ஒரு நாள் அவரிடமே அதுபற்றிக் கேட்டுவிடுவது என்று முடிவு செய்தார்.

அப்போது விவேகானந்தர் தனியாக இருந்தார். விஞ்ஞானனந்தர் தைரியத்தைத் திரட்டிக் கொண்டு அவர்முன் சென்றுர். சுவாமிஜி, பல நாளாக என் மனதில் ஒரு போராட்டம். அதைத் தீர்க்க வேண்டும்'' என்றுர். ''சுவாமிஜி ஒன்றும் சொல்லாமல், 'என்ன?' என்பது போல் கூர்ந்து பார்த்தார். விஞ்ஞானனந்தர் தொடர்ந்தார்—''நீங்கள் மேல்நாடு சென்றபோது பெண்களோடு நெருங்கிப் பழகியிருக்கிறீர்கள். இது நம் குருதேவரின் உபதேசங்களுக்கு மாருனது அல்லவா? அவர் அடிக்கடி, 'சந்நியாசி ஒருவன் ஒரு பெண்ணின் படத்தைக்கூடப் பார்க்கக்கூடாது' என்று சொல்லுவதில்லையா? அவர் எந்தப் பெண்ணோடும், அவள் எவ்வளவுதான் பக்தையாக இருந்தாலும் பழகக் கூடாது என்று எனக்குக் கூறியிருக்கிருர். ஆனல் நீங்கள் ஏன் இப்படிக் குருதேவரின் உபதேசத்திற்கு மாருக நடந்துகொள்கிறீர்கள் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றுர்.

இதைக் கேட்டதும் மலர்ச்சியாக இருந்த சுவாமிஜியின் முகம் மாறிவிட்டது. கண்கள் மூடிக்கொண்டன. மிக்க ஆழ்ந்த உணர்ச்சிப் பெருக்கு அவர் முகமெங்கும் பொங்கியது. அவருடைய இந்த நிலையைக் கண்டதும் விஞ்ஞானனந்தருக்கும் பயமே ஏற்பட்டுவிட்டது. இப்படி அவரிடம் கேட்ட முட்டாள்தனத்திற்காகத் தம்மையே நொந்துகொண்டார்.

சுவாமிஜியின் கண்களும் முகமும் இதற்குள் சிவந்துவிட்டன. நெடுநேரம் அவர் ஒன்றுமே பேசவில்லை. பிறகு நிதானமாகப் பெருமூச்சு விட்டபடி விஞ்ஞானனந்தரைப் பார்த்துச் சொன்னர்—''நல்ல கேள்வி கேட்டாய். இப்போது நீ குருதேவர் கூறியதாக ஓர் உபதேசத்தையும் அவரைப்பற்றியும் கூறினய். அதுதான் குருதேவரின் மொத்தமான வடிவம் என்றும் முடிவு செய்துவிட்டாய்.

''உன்னிடம் அவர், 'பெண்களிடம் நெருங்கிப் பழகாதே' என்று சொன்னர். மற்றவர்களிடம்,

'பெண்களின் படத்தைக்கூடப் பார்க்க வேண்டாம்' என்று சொன்னார். ஆனால் எனக்கு அவர் என்ன செய்தார் தெரியுமா? ஆண் பெண் என்ற வித்தியாசத்தையே என் மனதிலிருந்து நீக்கிவிட்டார். நான் ஒருவரைப் பார்த்தால் அவர் எனக்கு ஆன்மாவாகத் தெரிகிறாரே தவிர ஆணாகவோ பெண்ணாகவோ தெரிவதில்லை.

''அத்துடன் நம் குருதேவர் ஆண்களை மட்டும் கடைத்தேற்ற இந்த உலகத்துக்கு வந்ததாகவா நினைக்கிறாய்? அவர் உலகம் முழுவதையும்—ஆண்கள் பெண்கள் அனைவரையும்—கடைத் தேற்றத் தோன்றினார்.

''நீங்கள் எல்லோரும் உங்களுக்கு எவ்வளவு புத்தி இருக்கிறதோ அந்தப் புத்தியின் மூலம் அளந்துகொண்டு அதே புத்தி அளவுதான் ஸ்ரீராமகிருஷ்ணரும் இருக்கிறார் என்று நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். அவர் உங்கள் புத்தியையெல்லாம் தாண்டியவர். இந்தப் பூமியிலுள்ள மனிதர்கள் மட்டுமல்ல, இந்த அண்ட சராசரங்கள் அனைத்திலும் உள்ள எல்லா உயிர்களுமே அவருடைய கருணையால் துன்பம் தீர்ந்து ஆனந்தமடைந்துகொண்டிருக்கின்றன.

''அவர் உனக்கு என்ன உபதேசம் செய்தாரோ அது சரியல்ல என்று நான் சொல்லவில்லை. உன் வரையில் அது சரியானது. அந்த அறிவுரையை ஓர் இம்மிகூட நழுவாமல் நீ கடைப் பிடிக்க வேண்டும். ஆனால் எனக்கு அவருடைய உபதேசம் வேறானது. எனக்கு அவர் வெறும் உபதேசங்களை மட்டும் தந்ததோடு நின்றுவிட வில்லை. அந்த உபதேசங்களில் ஒவ்வொன்றும் எவ்வளவு உண்மையானது, சத்தியமானது என்பதை என் கண்முன் நிரூபித்துக் காட்டினார்.

''அவர் என்னைத் தம் கையால் பிடித்துக் கொண்டு, நான் நடக்க வேண்டிய பாதையில் முன்னே நடந்து செல்கிறார். நான் அவர் பின்னே, அவர் காலடிப் பாதையிலேயே நடந்து போய்க்கொண்டிருக்கிறேன். இதுதான் என் னுடைய நிலை. 'பெண்களோடு நெருங்கிப் பழகுகிறேனா, குருதேவரின் உபதேசங்களி லிருந்து மாறிப் போகிறேனா—இதெல்லாம் எனக்கு என்ன தெரியும்?''

விஞ்ஞானானந்தரின் நிலை இப்போது மிகவும் தர்மசங்கடமாகிவிட்டது. சுவாமிஜியின் முன்னால் நிற்கவும் தைரியம் இல்லை. ஓடிப்போகவும் துணிச்சல் இல்லை. தடுமாறியபடி நின்று கொண்டிருந்தார்.

அவருடைய நிலைமையைக் கண்ட சுவாமிஜி அன்போடு, ''பெண்களிடம் மறைந்து கிடக்கும் உலகத்தின் எழுச்சிக்குக் காரணமான சக்தியை வெளியே கொண்டுவரவில்லை என்றால், இந்த நாடு எழுந்து நிற்க முடியுமா? அல்லது மகோன்னதமான நாடாகத்தான் ஆக முடியுமா? நான் உலகம் முழுவதும் பயணம் செய்திருக் கிறேன். பெண்களின் நிலைமை எல்லா நாடுகளி லும் ஏறக்குறைய ஒரே மாதிரிதான் இருக்கிறது. குறிப்பாக நம் நாட்டில் அவர்கள் நிலை மிகவும் வேதனைக்கு உரியதாக இருக்கிறது. பெண்க ளிடம் மட்டும் ஒரு முறை எழுச்சி துவங்கி விட்டால் இந்த நாடு முழுவதுமே எழுச்சிபெற்று மகத்தான நிலையை அடைந்துவிடும். அதற் காகத்தான் அன்னை சாரதாதேவியார் தோன்றி யிருக்கிறார். அவருடைய தோற்றத்திற்குப் பிறகு உலகிலுள்ள எல்லா நாடுகளிலுமே பெண்களிடத்தில் ஓர் எழுச்சி உண்டாகியிருக் கிறது. இது ஆரம்பம்தான். இனிமேல் பெண் களின் எழுச்சியைப் பற்றிய மகத்தான காட்சிகளைக் காண்பாய்'' என்றார்.

விஞ்ஞானானந்தருக்கு இப்போது ஸ்ரீராம கிருஷ்ணர் எப்படிப்பட்டவர் என்பது புரிந்தது. விவேகானந்தரைவிட ஸ்ரீராமகிருஷ்ணரை இந்த உலகில் யாராலும் நன்றாகப் புரிந்துகொள்ள முடியாது என்பதும், இப்போது குருதேவரின் காரியங்கள் முழுவதும் விவேகானந்தரின் மூலமே நடைபெறுகின்றன என்பதும் விளங்கின.

இந்த உலகத்தில் எப்படி ஒரே ஒரு ஸ்ரீராம கிருஷ்ணரோ அப்படியே ஒரே ஒரு விவேகானந்தர் தாம் இருக்க முடியும் என்று விஞ்ஞானானந்தர் நினைத்தார். அவர் கண்களில் நீர் பனித்தது. சுவாமிஜியின் திருவடிகளைத் தொட்டுத் தலைமேல் சூடிக்கொண்டார். வழிந்த கண்ணீரைத் துடைத்தபடி வந்த வழியே திரும்பினார். ✽

---

தூய்மையான எண்ணத்துடன் ஒருவன் பேசினாலும் செயல் புரிந்தாலும், அவனை விட்டு விலகாத நிழல் போல, ஆனந்தம் அவனைப் பின்பற்றிச் செல்கிறது. —புத்தர்

அன்றே வெளிவந்தது.

# கும்ப மேளா - சந்நியாசிகள் விழா

**தி. சு. அவிநாசிலிங்கம்**

ஹரித்துவாரத்தில் இந்த வருஷம் கும்ப மேளா நடந்தது அனைவருக்கும் தெரிந்திருக்கும். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இந்தப் பெரிய விழா வருகிறது. இதைச் சிறப்பாக இந்து மக்கள் அனைவரும் கொண்டாடுகிறார்கள். வியாழன் கும்ப ராசியில் வரும்போதும், சூரியன் மேஷ ராசியில் வரும்போதும் மிகவும் புனிதமான காலம் என்று சாத்திர ஆராய்ச்சியாளர்கள் சொல்லுகிறார்கள். அந்தப் புனித காலத்தில்தான் இந்த விழாவும் வருகிறது. அதனால்தான் இதற்குக் கும்ப மேளா என்ற பெயர் போலும். 'மேளா' என்பதற்கு விழா என்று பொருள். இந்த விழா ஏப்ரல் மாதம் 13-ஆம் தேதி அதாவது நமது புது வருஷப் பிறப்பன்று வருகிறது. அன்றைய தினத்தில் ஹரித்துவாரத்தில் பிரம்மகுண்டத்தில் குளிப்பது மிக மிக விசேஷமாகக் கருதப்படுகிறது. அதற்கு முன்பு இந்த விழாவையொட்டிச் சிவராத்திரி தினமும் அமாவாசைத் தினமும் விசேஷமாகக் கொண்டாடப்பெறுகின்றன. அமாவாசைத் தினத்தன்று சுமார் நாலைந்து லட்ச மக்கள் பிரம்ம குண்டத்தில் நீராடுவர்.



சாதுக்களின் விழா இது. ஆதலால் இந்தச் சமயத்தில் ஹரித்துவாரத்தில் எங்கே பார்த்தாலும் ஒரே சாதுக்கள் மயம்! தசநாமிகள் வகுப்பைச் சேர்ந்த புரி, சரஸ்வதி, பாரதி போன்ற, காவியுடையணிந்து தலையை முற்றிலும் மொட்டையடித்த சந்நியாசிகள், முற்றிலும் துறந்து அரையில் கோவணமும் இல்லாமல் திரியும் நாகாக்கள், எந்தவிதமான சுகத்தையும் கருதாமல் அல்லும் பகலும் ராமநாமத்தையே பஜித்துக் கொண்டிருக்கும் வைராகிகள், தலையில் பெரிய சடைகள் தாங்கிய சடாதார், சீக்கியர்களின் ஆசார்யர்களில் ஒருவரான ஸ்ரீசந்திரன் பரம்பரையைச் சேர்ந்த உதாசிகள், இவர்களைப் போன்ற இந்து மதத்திலுள்ள பல்வேறு வகுப்புக்களிலுள்ள சாதுக்கள் எங்கே பார்த்தாலும் கும்பல் கும்பலாகக் காணப்பட்டார்கள். சுமார் நாற்பது ஐம்பதினாயிரம் சாதுக்கள் அங்கே கூடியிருப்பார்கள் என்று நம்புகிறேன்.

நாடு முழுவதிலிருந்தும் எல்லாவிதமான மொழிகள் பேசுபவர்களும் அங்கு வந்திருந்தார்கள். இவர்களைத் தரிசிப்பதற்கென்று மற்ற இலட்சக்கணக்கான மக்கள் ஆண்களும் பெண்களும் நாள்தோறும் வந்து கொண்டிருந்தார்கள். விழா முடிவதற்குள் சுமார் பதினைந்து இருபது இலட்சம் மக்கள் வந்து போவார்களாம்.

இந்த விழா சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்து நடந்து வருவதாகச் சொல்லப்படுகிறது. குறிப்பாகக் கும்ப மேளா என்ற பெயர் சொல்லப்படாவிடினும் சாதுக்கள் பலரும் சேர்ந்து மகாநாடுகள் கூடினதாக, சுமார் ஆயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்பு சீனதேசத்திலிருந்து வந்த பிரபல புத்த பக்தர் பாஹீன் தமது நாட்குறிப்புப் புத்தகத்தில் எழுதி வைத்திருக்கிறார். ஹர்ஷவர்த்தனப் பேரரசர் காலத்தில் இந்தப் பெருவிழா பிரயாகையில் நடந்ததாகவும், அந்த விழாவிற்கு ஹர்ஷவர்த்தனர் சென்று பல தானங்கள் செய்து வந்ததாகவும் வரலாற்றில் அறிகிறோம். அதற்குப் பிறகு ஜஹாங்கீர் காலத்தில் கும்ப மேளா என்ற பெயரே குறிப்பாகச் சொல்லப்படுகிறது. இந்த விழாக்கள் நாடெங்குமிருந்து சாதுக்கள் வந்து கூடுவதற்கு அரிய வாய்ப்பாக இருந்து வந்திருக்கின்றன. எல்லாவிதமான போக்குவரவு வசதிகளும் இருக்கும் போதே நம் நாட்டின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்திற்குப் போவது மிகவும் அரிதாக இருக்கிறது. அப்படி இருக்க, இந்தப் பரந்த தேசத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பே சாதுக்கள் கூடினார்கள் என்பது ஒரு மகத்தான ஆச்சரியம் அல்லவா?

இது சாதுக்களின் விழாவாகையால் அவர்களைப் பார்ப்பதுதான் சிறப்பு. ஆதலால் சாதுக்கள் ஆங்காங்கே தங்கியிருக்கும் இடங்களுக்குச் சென்று அவர்களைப் பார்த்து வரச் சென்றோம். சாதுக்களில் சிறந்தவர்களுக்கு மண்டலேசுவரர்கள் என்று பெயர். அவர்களே சாதுக்களுக்குத் தலைமையாக விளங்குகிறார்கள். அவர்களில் சிலரையும் பார்த்து வந்தோம். இடம் போதாமையால் பல இடங்களில் புல் வேய்ந்த கூரைகளுக்கு அடியில் பலர் வசித்துக்கொண்டிருந்தார்கள். இம்மாதிரி

ஓரிடத்தில் நாகா சாதுக்கள் இருந்தார்கள். முகம்மதியர்களின் படையெடுப்புக்களின்போது சாதுக்கள் பல விதமாகத் தொந்தரவு செய்யப்பட்டார்கள். அவர்களைக் காப்பாற்றுவதற்காகச் சிலரை உண்டாக்க வேண்டியிருந்தது. அதற்கென்று உண்டானவர்களே நாகா சாதுக்கள். சங்கார் பரம்பரையைச் சேர்ந்த தசநாமி சாதுக்களுக்கு இவர்கள்தாம் காப்பாளர்கள். இவர்களில் பலருக்குக் குஸ்தி, குதிரையோட்டம், கத்திச் சண்டை, தடி விளையாட்டு முதலியன தெரியுமாம்.

சங்கரர் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் பொதுவாகத் தசநாமிகள் அதாவது புரி, சரஸ்வதி, பாரதி முதலிய பத்து வகைகளைச் சேர்ந்தவர்கள். இராமகிருஷ்ண மடத்துச் சாதுக்கள் புரி வகையைச் சேர்ந்தவர்கள். இவர்களில் பெரும்பான்மையோர் அவரவர் ஆசிரமங்களில் வசித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆங்காங்கே பல வகுப்புக்கள் வைக்கப்பட்டு, கீதை, உபநிடதம் முதலியன பற்றிச் சொற்பொழிவு நடந்துகொண்டிருந்தன. இவர்கள் அனைவரும் தலையை மொட்டையடித்துக் காவியுடை அணிபவர்கள். இவர்களில் பலர் வேதாந்த சாத்திரங்களில் நல்ல பயிற்சி உடையவர்களாகவும் இருந்தார்கள்.



வைராகிகளை வைஷ்ணவ சாதுக்கள் என்று சொல்லலாம். இவர்களுக்குச் சாத்திரங்கள் அதிகம் படிப்பதில் நம்பிக்கையில்லை. காவியும் அணிவதில்லை; தலையையும் மொட்டையடித்துக் கொள்வதில்லை. இவர்களின் பெயரிலிருந்து இவர்கள் 'கடுமையான வைராக்கியமுள்ளவர்கள்' என்ற அர்த்தம் புலப்படும். உடல்நலத்தை நினைத்தும் பாராதவர்கள். கங்கைக் கரையில் சிறுசிறு கூடாரங்கள் அமைத்து, வெயிலிலும் குளிரிலும் அங்கேயே கிடக்கிறார்கள். மிகக் கொடுமையான குளிரிலும் ஒரு வெறும் கம்பளத்தைத் தவிர வேறு அதிகமாக அவர்களிடம் காண முடியாது. சூரியன் மறைந்ததும் இரண்டு மூன்று விறகுக் கட்டைகளுக்கு நெருப்பை மூட்டி, அதைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு இரவு முழுவதையும் அங்கேயே கழிக்கின்றார்கள். அதிகாலையில் எழுந்ததும் பனிக்கட்டி போலிருக்கும் தண்ணீரில் குளித்து அவரவர் வைத்திருக்கும் இராமர் அல்லது கிருஷ்ண விக்கிரகங்களுக்குப் பூஜை செய்கிறார்கள். அவர்களுக்குத் துளசீதாஸ் இராமாயணம் வாசிப்பதிலும் ஸ்ரீராம பஜனை செய்வதிலும் மிகப் பிரியம். இவர்கள் இருக்கும் இடங்களில் காலையிலும் மாலையிலும் எப்பொழுதும் பஜனை ஒலி கேட்கலாம். 'ரகுபதி ராகவ ராஜாராம்' ஒரு புறம்; 'ராதாகிருஷ்ண ராதாகிருஷ்ண' இன்னொரு புறம்; 'ஹரே'ராம் ஹரே கிருஷ்ண' ஒரு புறம், 'கிருஷ்ண கோவிந்த மாதவ முராரே' மற்றொரு புறம். இன்னும் விஷ்ணுவின் நாமாவளி பஜனை எப்பொழுதும் நடந்து கொண்டிருப்பதைக் காணலாம். தசநாமித் துறவிகள் உணவு எங்குக் கிடைத்தாலும் அருந்துவார்கள். ஆனால், வைராகிகள் அதிலும் கட்டுப்பாடுடையவர்கள். சமைத்த உணவுகளை எங்கும் ஏற்றுக் கொள்வதில்லை. போகிற இடங்களில் பிச்சையெடுத்துத் தாங்களே சமைத்து உண்பார்கள். நாங்கள் பார்த்த பலவகைச் சாதுக்களில் இவர்கள்தாம் கடுந்தவசிகள் என்று சொல்ல வேண்டும்.

இன்னும் பலவிதமான சாதுக்கள் ஆங்காங்கே தங்கள் தங்கள் இடங்களில் வசித்துக் கொண்டிருந்தனர். உதாசிகளும் வைராகிகளைப் போல் தேகசுக நினைப்புச் சிறிதுமின்றி இருப்பவர்கள்; அனைவரும் தாடி வளர்த்து ஜடாதாரிகளாக இருப்பார்கள். சாதாரணமாக ஒரு கோவணம் மாத்திரம்தான் அணிவார்கள். அதற்காகக் கட்டியிருக்கும் அரைஞாண் கயிறு வடக் கயிறு மாதிரி இருக்கும். இவர்கள் பெரும்பாலும் பஞ்சாப் மாகாணத்திலிருந்து வருபவர்கள்; உடல் பருத்து மல்லர்கள் மாதிரி இருப்பார்கள். அழகான உடை தரித்து, பெரிய மனிதர்கள் போல் விளங்கும் நிர்மலர்களையும் பார்த்தோம். காதில் துவாரம் செய்துகொண்டிருக்கும் கான்பாட்டாக்கள், ஒரு கையை எப்பொழுதும் உயர்த்திக்கொண்டிருப்பவர்கள், இவர்களைப் போன்ற சாதுக்கள் பலரையும் பார்த்தோம்.

சிவராத்திரி தினம், அமாவாசை ஏப்ரல் 13 (தமிழ் வருஷப்பிறப்பு நாள்) இந்த நாட்களிலும் சாதுக்கள் ஊர்வலமாகச் சென்று பிரம்மகுண்டத்தில் நீராடுவர். நிரஞ்சன ஜூனா அக்காடாவை (அக்காடா என்றால் ஆசிரமம் என்று பொருள்) சேர்ந்தவர்கள் முதலிலும், நிர்வாண அததுல் அக்காடாவைச் சேர்ந்தவர்கள் இரண்டாவதும், அதற்குப் பிறகு உதாசிகள், வைராகிகள் முதலியவர்களும் அவரவர்களின் ஆசிரமங்களிலிருந்து புறப்பட்டு வருகிறார்கள்.

அந்த ஊர்வலங்களில் அந்த அந்த மண்டலேசுவரர்கள் தலைமை பூண்டு, பலவிதமாக அலங்கரிக்கப்பெற்ற யானைகளின் மேல் அமர்ந்து அவரவர்கள் கொடியும் குடையும் பிடிக்கப்பட்டுப்

புடைசூழ வருகிற காட்சி மிகவும் கம்பீரமாக இருக்கும். அவர்களுக்குப் பின் மற்றச் சாதுக்களும் நாகர்களும் ஆயிரக்கணக்கான பேர்கள் நடந்து செல்கிறார்கள். அப்படிச் செல்லும்போது, 'ஸநாதன தர்மகீ ஜே', 'சங்கராசாரியாருக்கு ஜே' — இம்மாதிரிப் பலவாறாக 'ஜே'கோஷம் செய்துகொண்டே செல்லுகிறார்கள். இலட்சக் கணக்கான மக்கள், ஆண்களும் பெண்களும், சாலைகளின் இருபக்கங்களிலும் நின்றுகொண்டு ஊர்வலத்தை வெகு ஆர்வத்துடன் பார்க்கிறார்கள். ஊர்வலம் கடந்து சென்றதும் பலர் ஊர்வலம் சென்ற பாதைக்கு ஓடிவந்து நெடுகப் படுத்துச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்கிறார்கள். சிலர் அந்த மண்ணை எடுத்துத் தங்கள் தலைகளின் மேல் தூவிக்கொள்ளுகிறார்கள். இன்னும் சிலர் அதில் புரளுகிறார்கள். சிலர் அந்த மண்ணில் கொஞ்சம் பத்திரமாய் எடுத்து அருமையாய்க் கடிதத்தில் கட்டிக்கொண்டு போகிறார்கள்.



சந்நியாகாலத்தில் எங்கே பார்த்தாலும் மணி அடிக்கும் சத்தம் கேட்கும். அங்கிருக்கும் ஆசிரமங்களில் ஆங்காங்கே பூஜை நடந்துகொண்டிருக்கும். சாதுக்களில் பலர் கங்கைக் கரையில் மக்கள் இரைச்சலில்லாத இடங்களில் நீராடி அப்படியே தியானத்தில் உட்கார்ந்திருப்பதைக் காணலாம். அங்கே காணும் பூஜைகளிலெல்லாம் நம் மனத்தைக் கவரும் பூஜையொன்று உண்டு. பிரம்ம குண்டத்தில் பூஜை செய்பவர் பெரிய தட்டொன்றில் மலர்கள் முதலியனவுடன் கங்கைக்குக் கர்ப்பூர ஆரத்தி செய்து அதை அப்படியே பிரம்ம குண்டத்தில் மிதக்க விடுகிறார்கள். இங்ஙனம் விடப்பட்ட தட்டங்களில் கர்ப்பூரம் சுடர் விட்டு ஜோதியுடன் எரிய, அங்கு மிதந்துகொண்டிருப்பது அழகான காட்சி. அங்கே மாலையில் இலட்சக் கணக்கான மக்கள் அதைப் பார்க்க வந்து போவார்கள். சாதுக்களும் நிறைய வந்திருப்பார்கள்.

எப்பொழுதும் பணம் பெருமை உடல்நலம் இவற்றையே பெரிதாக நினைக்கும் நமக்குக் கும்ப மேளாக் காட்சிகள் ஒரு புதிய உலகத்தையும் உணர்வையும் ஏற்படுத்துகின்றன.

—ஸ்ரீராமகிருஷ்ண விஜயம், மே 1938

---

## சிந்தனைச் சுடர்

நான் நன்கு தட்டிக் கொட்டிப் பார்த்துச் சிந்தித்து முடிவு கண்டிருக்கிறேன்—உலகில் வேறு எந்த நெறிச் செயல்களும் ஹரிநாம ஜபத்திற்கு இணையாகவே முடியாது. யானை குதிரைகளை ஏராளமாகத் தானமளித்தாலும், தங்கச் சுரங்கத்தையே வாரி வழங்கினாலும், பூமிதானம், கோதானமெல்லாம் நிறையச் செய்தாலும், அகந்தை மனதை விட்டுப் போகாது. என் உள்ளத்தை ராமநாமம் துளைத்தெடுத்திருக்கிறது. இந்த அருள்பாலிப்பு, குருவின் கருணையால் எனக்குக் கிட்டியிருக்கிறது. மனதின் பிடிவாதம் காரணமாகப் பல உபாயங்கள் குறைந்துவிட்டன. வேத தத்துவங்களும், விளக்க விரிவுரைகளும் பலப் பல. இவை யாவுமே ஆத்மாவிற்குத் தளைகள். குருவின் மூலமே முக்திவழி கிட்டுகிறது. எல்லா அறிவுகளும் சத்திய ஞானத்தைவிடச் சிறந்தவை. நான் சகலத்தையும் உயர்ந்தவையாகவே கருதுகிறேன்.

எனக்கு எவருமே தாழ்ந்தவராகத் தோன்றுவதில்லை; இறைவன் ஒருவனே சகலத்தையும் படைத்திருக்கிறான். ஒரே அருட்பெருஞ்சோதி அகிலமெங்கும் பிரகாசிக்கிறது. எனினும், சத்தியம் இறைவனின் அருளால்தான் கிட்டும். அவனருளை எவரும் தடுக்க இயலாது. இந்தக் கோட்பாட்டை ஏற்று வாழ விரும்புகிறவர், அறவோரின் கூட்டுறவைப் பெற வேண்டும்.

குருவினிடம் அன்புப் பக்தி செலுத்தினால் மனமகிழ்வு ஏற்படும்; என்றும் மகிழ்ச்சி நிலவும். சத்குருவிடம் ஞானதீட்சை பெற்றுவிட்டால், இறைவனின் திவ்ய சரிதத்தை உட்கருத்துக்களுடன் புரிந்துகொண்டு சிந்திக்கிறான்; இறைவனை அறிகிறான். திருநாமம் எனும் அமுதத்தைப் பருகித் திருப்தியடைகிறான். இறைவன் திருவடிகளில் புகப்பெறுகிறான். இறைவன் திருநாமத்தில் லயித்திருப்பவன், அதன் இன்னொலியை எல்லாச் சரீரங்களிலும் செவிமடுப்பான். ஆனால் இந்த நல்லறிவு குருவின் அருளால் தன் மனதை அறிந்துள்ள மிகச் சிலருக்குத்தான் அரிதாக ஏற்படும். குருவின் அருளாசிப்படி வாழ்பவர்களுக்கு மட்டுமே, இறைவன் திருநாமத்தை மறவாதவர்களுக்கு மட்டுமே, முக்தி கிட்டுகிறது.

—குரு நானக் அருள்வாக்கு

# கடவுளைக் காட்டும் பாதைகள்

சுவாமி விஞ்ஞானானந்தர்

## ஒன்று, பல

மற்ற எல்லாச் சமயங்களைப் போலவே இந்து சமயமும் கடவுள் ஒருவரே என்று கூறுகிறது. அதே நேரத்தில் அவருக்கு அளவற்ற வடிவங்கள் உண்டு; பெயர்கள் உண்டு; அவதாரங்கள் உண்டு; எந்த வடிவத்தில், எந்தப் பெயரில், எந்த அவதாரத்தில் அவரை வணங்கினாலும், வணங்குபவர்கள் ஒன்றாகவே இருக்கிற அந்த ஒரே கடவுளையே சென்று அடைகிறார்கள் என்றும் கூறுகிறது. வேதம், 'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி — இருக்கும் கடவுள் ஒன்றுதான். அது பல பெயரால் அழைக்கப்படுகிறது' என்று கூறுகிறது. கீதையில் பகவான், 'யார் யார் எந்த எந்த வடிவத்தில் சிரத்தையோடு வணங்குகிறார்களோ, அவர்களுடைய சிரத்தை காரணமாக நான் அவர்கள் விரும்பும் வடிவமாகிறேன்' (7-21) என்று கூறுகிறார்.

## முழுக் கடவுள்

கிறித்துவ சமயத்தில் கூறப்படும் கடவுளான ஏசு, கடவுளின் பிள்ளை மட்டுமே (தேவகுமாரன்). இஸ்லாமில் கூறப்படும் நபிநாயகம் கடவுளின் தூதுவர் மட்டுமே. ஆனால் இந்து சமயத்தில் கூறப்படும் ராமரும் கிருஷ்ணரும் கடவுளின் பிள்ளையோ, தூதுவரோ அல்ல; கடவுளே அவர்கள்.

## பல வழிகள்

இந்து சமயத்தின் மற்றோர் ஈடுஇணையற்ற தன்மை, மற்றச் சமயங்கள் அனைத்திலும் கடவுளை அடைவதற்கு ஒரே ஒரு மார்க்கம்தான் உண்டு என்று கூறும்போது, இந்து சமயமோ ஞான மார்க்கம், பக்தி மார்க்கம், கர்ம மார்க்கம், தியான மார்க்கம் என்று பல வழிகளின் மூலமாக இறைவனை அடையலாம் என்று கூறுகிறது.

## இயல்புக்கு ஏற்றாற்போல்

உலகிலுள்ள மக்கள் பலவேறு மனஇயல்பைக் கொண்டவர்களாக இருக்கிறார்கள். சிலர் சொத்து சுகம், உற்றார் உறவினர் முதலிய அனைத்தையும் துறந்துவிடும் மனவலிமை உடையவர்களாக இருக்கிறார்கள். இவர்களுக்கு ஞான மார்க்கம் பொருத்தமாகும்.

சிலர் உணர்ச்சிமயமானவர்களாக இருக்கின்றனர். இவர்களுக்குப் பக்தி மார்க்கம் மிகவும் பொருத்தமானதாகும்.



சிலர் எப்போதும் பரபரப்போடு காரியம் செய்யும் இயல்புடையவர்களாக இருக்கிறார்கள். இன்னும் சிலர் இருக்கிறார்கள்; இவர்கள் மனதை அடக்கித் தியானத்தில் ஈடுபடும் இயல்புள்ளவர்களாக இருக்கிறார்கள். இவர்களுக்குத் தியான மார்க்கம் பொருத்தமானது.

## பெரும்பாலான மக்கள்

உலக மக்கள் அனைவருமே மேற்கூறிய மனநிலைகளைப் பெற்றவர்களாக இல்லை. பெரும்பாலானவர்களுக்கு எதையும் துறக்கக் கூடிய மன ஆற்றலோ உணர்ச்சிமயமான உள்ளமோ பரபரப்பாக வேலைசெய்யும் ஆற்றலோ மனதை அடக்கும் ஆற்றலோ சிறிதும் இல்லை. இவர்கள் உடலாலும் மனதாலும் மிகமிகப் பலவீனமானவர்

களாக இருக்கிறார்கள். இவர்கள் இயல்பில் பாவம் செய்பவர்களாகவும், தாங்கள் செய்வது பாவம் என்று தெரிந்தும் அதிலிருந்து விடுபடும் ஆற்றல் இல்லாதவர்களாகவும் இருக்கிறார்கள்.

### கதியே இல்லையா?

இப்படிப்பட்டவர்களுக்குக் கதிமோட்சமே இல்லையா? பாவத்திலிருந்து இவர்களுக்கு மீட்சி கிடையாதா? வாழ்வின் துன்பத்தையும் துயரத்தையும் இவர்களால் தவிர்க்க முடியாதா? முடியும். இவர்களுக்கும் மீட்சிக்கான வழி இருக்கிறது. அந்த வழி எது என்றால், கடவுளின் கருணையை-அருளை-அவருடைய அளப்பரும் சக்தியை மட்டுமே நம்பி, எல்லாவற்றையும் அவரிடம் ஒப்படைத்துவிடும் வழியாகும். அப்படிக் கடவுளின் கருணை ஒன்றையே எதிர்பார்த்து வாழ்ந்து, கடவுளை அடையக்கூடிய வழி தான் சரணாகதி அல்லது தன்னையே கடவுளிடம் ஒப்படைத்துக் கொள்ளும் வழியாகும்.

### என்னையே சரணடை

இத்தகையவர்கள் பாவம் செய்பவர்கள்தாம். இதில் சந்தேகமே இல்லை. ஆனால் கடவுளின் கருணை எல்லையற்றது. அந்த எல்லையற்ற கருணையைப் பற்றிக்கொண்டு இவர்கள் கடவுளிடம் சரணடைவார்களேயானால் நிச்சயம் காப்பாற்றப்படுவார்கள்.

கீதையில் பகவான் ஞான மார்க்கம், பக்தி மார்க்கம், கர்ம மார்க்கம், தியான மார்க்கம் முதலியவற்றையெல்லாம் உபதேசித்த பிறகு கடைசியில—''என்னை அடைவதற்கான எல்லா மார்க்கங்களையும் விட்டுவிட்டு என் ஒருவனையே சரணடை. உன்னை நான் எல்லாப் பாவங்களிலிருந்தும் காப்பாற்றுகிறேன்'' (18-66) என்று கூறுகிறார்.

### ஏசுவின் வாழ்க்கையில்

ஏசுவின் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி— ஏசு ஓர் இடத்திற்குப் போய்க்கொண்டிருக்கிறார். எதிரே திரளாக மக்கள் கூடியிருக்கிறார்கள். எல்லோரும் ஆண்கள். நடுவில் ஒரு பெண் நிற்கிறாள். ஆண்கள் எல்லோருடைய கைகளிலும் கல் இருக்கிறது. அந்தப் பெண் அழுது துடித்துக் கொண்டிருக்கிறாள். அவள் விபசாரம் செய்து விட்டாள். அந்த நாட்டின் வழக்கப்படி அவள் கல்லால் அடித்துக் கொல்லப்பட வேண்டும்.

அந்தப் பெண் ஏசுவைக் கண்டதும், ஓ என்று கதறி, ''என்னைக் காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்!'' என்று அழுதாள். ஏசுவின் கண்களில் நீர் வழிந்தது. அவளை அடித்துக் கொல்லக் கையில் கற்களோடு நின்ற ஆண்களின் கூட்டத்தைப் பார்த்தார். பிறகு அவர்களிடம், ''இங்கே இருக்கும் உங்களில், நினைப்பால்கூட விபசாரம் செய்யாதவர்கள், பிற பெண்ணைப் பார்க்கும்போது காமநினைவு ஒரு துளியும் மனதில் தோன்றாதவர்கள் மட்டும் இந்தப் பெண்மீது கல்லை எறியுங்கள்'' என்றார்.

கூட்டம் திகைத்து நின்றது. பிறகு கற்கள் அவர்கள் கைகளிலிருந்து கீழே விழுந்தன. ஒவ்வொருவராகத் தலையைத் தொங்கப் போட்டபடி அங்கிருந்து போய்விடுகிறார்கள்.

ஏசு அந்தப் பெண்ணிடம், ''மகளே! இதுவரை நீ செய்த பாவங்களுக்கெல்லாம் ஆண்டவனிடம் மன்னிப்புக் கேள். இனிமேல் இது போல் செய்யாதே'' என்றார். அந்தப் பெண் ஏசுவின் கால்களில் வீழ்ந்து, ''நீங்களே என் கடவுள். நீங்களே என்னைக் காத்தவர்'' என்று கூறினாள். அதற்கு ஏசு, ''எப்போதும் ஆண்டவனை நினைத்துக்கொண்டிரு. நீ காப்பாற்றப்படுவாய்'' என்றார். இதுதான் சரணாகதி அல்லது கடவுளிடம் தன்னை ஒப்புவித்தல் என்பது. [தொடரும்]




சுவாமி கமலாத்மானந்தர்

கேள்வி: சிவபெருமானுக்கு அஷ்டபுஷ்பம் சாத்துதல் சிறந்தது என்கிறார்களே; அவை என்ன என்ன?

பதில்: புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியா வர்த்தை, நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை ஆகிய இவை எல்லாக் காலத்திற்கும் பொதுவாகிய அஷ்ட புஷ்பங்களாகும்.

இந்த மலர்களைவிட இறைவனுக்கு உகந்த மலர் வேறொன்று உண்டு. அதுதான் சொல் மலர். இறைவனைத் துதிக்கும் சொல் அனைத்தும் சொல்மலர் ஆகும். இறைவனைக் குறித்துப் பேசாத நாள் அனைத்தும் பிறவா நாளுக்கே சமம். 'வாயே வாழ்த்துக் கண்டாய்' என்பது நாவுக்கு அரசராகத் திகழ்ந்த அப்பர் வாக்கு.

(புன்னை முதலிய எட்டு மலர்களின் பெயரைக் குறிப்பிடுவது மட்டுமே பதில் என்றால் அதை விஜயம் வெளியிட வேண்டிய அவசியம் இல்லையே!)

அகிம்ஸை, புலனடக்கம், க்ஷாந்தி (பொறுமை) புஷ்பம், தயாபுஷ்பம், ஞானபுஷ்பம், தவபுஷ்பம், சத்திய புஷ்பம், பாவ (தியான) புஷ்பம் ஆகிய வற்றையும் அஷ்ட புஷ்பங்கள் என்றே சொல்வது மரபு.

கேள்வி: 'ஞானம், விஞ்ஞானம்' என்றால் என்ன?

பதில்: பகவத்கீதையில் ஏழாம் அத்தியாயத்துக்கு ஞானவிஞ்ஞான யோகம் என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில், பகவான் ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் போதிக்கிறார். ஞானம் என்பது சிந்தனையால் நித்ய வஸ்துவை அறிய ஹேதுவான அறிவு. நித்ய வஸ்துவான பரப்பிரம்மம்தான் எல்லாவற்றிற்கும் ஆதாரம் என்று தெளிவடைந்த பிறகும், எல்லாப் பொருள்களிடம் தன்னையும், எல்லாப் பொருள்களையும் தன்னிடமும் பார்க்கும் சமபாவம் உண்டாகி ஸ்வானுபவத்தில் அதைச் சாட்சாத்கரிப்பது விஞ்ஞானம் என்று சொல்லப்படும்.

உதாரணமாக, சர்க்கரை, வெல்லம் இவை சேர்ந்த பதார்த்தங்கள் எல்லாம் இனிப்புச் சுவையை உடையன என்று ஒருவன் படிக்கிறான். இதுதான் இனிப்புச் சுவை ஞானம். ஆனால் அந்தப் பதார்த்தத்தை ருசி பார்த்த பிறகுதான் இனிப்புச் சுவை எங்ஙனம் இருக்கும் என்று அவனுக்குப் புலப்படும். இந்த அனுபவந்தான் இனிப்பு-சுவையின் விஞ்ஞானம்.

அது போல் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியுள்ளதை ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்: ''நாமரூபத்தைக் கொண்டு பேதபுத்தியைக் கொள்வது அஞ்ஞானம். பரப்பிரம்மமும் ஆத்மாவும் ஒன்றே என்று அறிவது ஞானம். ஆனால், எதிலும் ஊடுருவி நிலைத்திருக்கும் பரம்பொருளை, சரம், அசரம் என்று சொல்லப்படும் எல்லாப் பொருள்களிலும் கண்டு உணர்ந்து, மேன்மக்கள்-கீழ்மக்கள், நல்லது-கெட்டது, இன்பம்—துன்பம் இவற்றிலும், அன்றாட வாழ்க்கையிலும் சமபாவத்துடனும், சமாதி நிலையிலும் உணர்ந்து அனுபவிப்பதுதான் விஞ்ஞானம்.''

கேள்வி: 'துரீயம்' என்பது என்ன?

பதில்: சாதாரண வாழ்க்கையில் நாம் மூன்று நிலைகளைத்தான் அறிகிறோம். அதாவது விழிப்பு நிலை, கனவுநிலை, ஆழ்ந்த உறக்கநிலை என்பன.

'துரீயம்' என்றால் நான்காவது என்று பொருள். ஆனால் இந்த 'நான்காவது' என்ற எண்ணிக்கை

துரீயத்தை விவரிக்காது. வெளிப்படையாக அனுபவிக்கப்படும் மூன்று நிலைகளுக்கும் துரீயத்துக்கும் உள்ள உறவை, சமுத்திரத்தில் உள்ள அலைகளுக்கும், நுரைக்கும், சமுத்திரத்தின் நீருக்கும் உள்ள உறவு போன்றது என்று கூறலாம். எங்ஙனம் இவை சமுத்திரத்தின் நீரின் மீது வெவ்வேறு பெயருடனும் உருவத்துடனும் மிதந்து காட்சியளிக்கின்றனவோ, அதே மாதிரி இந்தத் துரீயம் என்ற தூய உணர்வின் மாயையான தோற்றம் மூன்று நிலைகளாகத் தோன்றுகிறது.

துரீயம் ஒன்றுதான் மாறுதலற்ற தூயஉணர்வு (Pure Consciousness). அதேதான் ஆத்மா, சத்தியம், ஞானம், அனந்தம், சிவம், சுந்தரம், சாந்தம், அத்வைதம் (இரண்டற்றது) என்று சொல்லப்படும் பேருண்மை (Absolute Reality).

மாயையின் உபாதியால் விழிப்பு நிலையில் ஸ்தூல சரீரத்துடன் இணைந்துகொண்டு வெளிப்பொருள்களால் உண்டாகும் பற்பல இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றது. கனவில் தன் பிரகாசத்தினாலேயே சூக்ஷ்ம சரீரத்துடன் இணைந்துகொண்டு கற்பனை உலக அனுபவங்களுக்குள்ளாகிறது. பிறகு ஆழ்ந்த நித்திரையில் ஸ்தூல-சூக்ஷ்ம சரீரங்களை உள்ளிழுத்துக் கொண்டு ஒன்றையும் அறியாதவன் போல் ஒரு வித ஆனந்தத்தை அனுபவிப்பது போல் காட்சியளிக்கிறது. இவ்வாறு எல்லா வித அனுபவங்களையும் கடந்த தூய மெய்யுணர்வுதான் துரீயம் என்று விவரிக்கப்படுகிறது. தனி ஜீவனின் வெவ்வேறு அனுபவங்களுக்கெல்லாம் ஒரு தொடர்ச்சியையும் தொடர்பையும் கொடுப்பதுதான் துரீயம். இதுதான் உலகில் எல்லாப் பொருள்களும் இயங்குவதற்கு ஆதாரமாய் நிற்கும் வஸ்து.

கேள்வி: மாங்கல்யம் மூன்று முடிச்சுகளுடன் திகழ்வது ஏன்?

பதில்: தெய்வபக்தியுடன் தெய்வசங்கல்பத்திற்கு உட்பட்டு வாழ்தல், பெற்றோருக்குக் கட்டுப் பட்டிருத்தல், கணவனுக்கு அடங்கி வாழ்தல் ஆகிய மூன்று பண்புகளையும் கொண்டவளாக ஒரு பெண் இருத்தல் வேண்டும். இந்தக் கருத்தைத் திருமணத்தின்போது அணிவிக்கப்பெறும் மாங்கல்யத்தின் மூன்று முடிச்சுகள் உணர்த்துகின்றன.

இளஞ்செடிகளை ஆடுமாடுகள் அழித்துவிடாமல் வேலியிட்டுப் பாதுகாப்பது போல், மாங்கல்யம் எனப்படும் தாலியும் ஒரு பெண்ணின் நல்வாழ்க்கைக்கு வேலிபோன்று அமைந்து பாதுகாக்கிறது.

தெய்வபக்தி, பெற்றோரிடம் அன்பு, கணவன் மேற்கொள்ளும் தார்மிக நெறிகளுக்கு முழுமனதுடன் உதவுதல் ஆகியவை ஓர் உத்தமப் பெண்ணிடம் இயல்பாகக் காணப்படும்.

பூ: புவ: ஸுவ: (விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம்) ஆகியவற்றை மாங்கல்யத்தின் மூன்று முடிச்சுகளும் உணர்த்துவதாகவும் சொல்லப்படுகிறது. அவ்விதம் பொருள் கொண்டால் விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகளிலும் தெய்விக உணர்வுகள் ஒரு பெண்ணிடம் இடம் பெற வேண்டும் என்பது மாங்கல்யத்தின் கருத்தாக அமைகிறது.

பூணூலில் மூன்று இழைகள் உள்ளன. எனவே அது முப்புரி எனப்பெறுகிறது. ஆண்கள் தரிக்கும் முப்புரிக்கு உள்ள தத்துவம் அனைத்துமே பெண்கள் தரிக்கும் மாங்கல்யத்திற்கும் பொருந்தும். அவ்விதம் பொருள் கொள்ளும்போது, சொல் செயல் சிந்தனைகளில் தன்னடக்கம் இருக்க வேண்டும் என்பது மாங்கல்யத்தின் கருத்தாக அமைகிறது.

சொல், செயல், சிந்தனை எனப்படும் மூன்றையும் இறைவன் திருவடிகளுக்கு முக்கனிகளாக அர்ப்பித்தலே சாலச் சிறந்தது.

மாங்கல்யம் ஒன்பது இழைகளை உடையது. இந்த ஒன்பது இழைகளும் காயத்ரி மந்திரம் குறிப்பிடுகிற 1. வாழ்க்கையை உள்ளது உள்ளபடியே புரிந்துகொள்ளுதல், 2. ஆற்றல், 3. மேன்மை, 4. தூய்மை, 5. தெய்விக நோக்கம், 6. உத்தம குணங்கள், 7. விவேகம், 8. தன்னடக்கம், 9. தொண்டு ஆகியவற்றை ஒரு பெண் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கருத்தில் அமைக்கப்பெற்றவை ஆகும். ○

---

நாவின் சுவையை மட்டும் விரும்புவது நல்லதல்ல. உடலின் நலத்தையே முதலில் கவனிக்க வேண்டும். நாச் சுவை நன்மையைத் தராது. அதே போன்று கசக்கிற உண்மைகளை எவர் எடுத்துக் கூறினாலும் நாம் அதைக் கவனிக்க வேண்டும்.

—குறளின் சொல்லாட்சி

# துளசிதாசரின் உள்ளம்

திரட்டும் தமிழும்: எஸ். பி. ராஜகுமாரி

துளசிதாசர் இயற்றிய 'விநயபத்ரிகா' என்ற நூலிலிருந்து சில பகுதிகள் இங்கே தரப்பெறுகின்றன.

ஹரி! எதன் மூலம் கனவில்கூட முக்தி அடைய இயலாதோ அதையே துளசிதாசனாகிய நான் இரவும் பகலும் செய்துகொண்டிருக்கிறேன். இந்த நிலையில் உன்மீது நான் எப்படிக் குற்றம் சாட்ட முடியும்?

செல்வம் (நிலம், பணம், தானியம், நண்பர், கால்நடைச் செல்வம் ஆகியவற்றை அடைவதும் வளர்த்துக்கொள்ள நினைப்பதும்), தீமையின் மொத்த உருவமாகும். அது காரணமாக நான் பாழுங் கிணற்றில்தான் விழுவேன் என்பதை நன்கு அறிவேன். ஆயினும் அதை விடாமல், நாய், ஆடு, கழுதை முதலியவற்றைப் போன்று சிற்றின்பத்தில் திளைத்துத் திரிந்துகொண்டிருக்கிறேன்.

எல்லா உயிர்களையும் பகைத்துக்கொண்டிருக்கிறேன். மோகத்திற்கு வசப்பட்டுவிட்டேன். எனக்கு நலன் தருவதைப்பற்றிச் சிறிதும் நான் சிந்திக்கவில்லை.

ஞானத்தின் பகைவர்களான கர்வம், பொறாமை ஆகியவற்றிலேயே எப்பொழுதும் மூழ்கியிருக்கிறேன்.

வேத புராணங்களைக் கேட்டதனால் எல்லா உலகங்களிலும் ரகுநாதரே வியாபித்திருக்கிறார் என்பதை அறிந்திருக்கிறேன். ஆயினும் எவ்விதம் சந்தன மரத்தின் நறுமணம் மூங்கிலில் நுழையாதோ, அது போலவே என் பாழும் மனதிலும் இந்த உண்மை நுழையவில்லை.

கருணையின் இருப்பிடமான ஸ்ரீராமா! நான் குற்றங்களின் சமுத்திரம் என்பதை நீ அறிவாய். ஏனென்றால் நீ என் இதயத்தில் வசிக்கும் இறைவனாவாய்.

கருடவாகனனே! பிறவித் துன்பம் என்ற பாம்பால் பிடிக்கப்பட்டிருக்கும் நான் உன்னிடம் தஞ்சமடைந்திருக்கிறேன். என்னைக் காப்பாற்றுவாயாக. (உனது வாகனமான கருடனைக் கண்டவுடன் எனது பிறவித்துன்பம் என்ற பாம்பு பயந்து ஓடிவிடும். எனவே என்னிடம் ஒரு முறை வருவாயாக.)

* * *

ஹரி! நான் எந்த வகையில் சுகம் அடைவேன்? யானைத் தந்தங்கள் எப்படி இருக்கின்றனவோ அது போலத்தான் நான் செய்யும் காரியங்களும் இருக்கின்றன. இதை நீ நன்கு அறிவாய். (வெளித் தோற்றத்திற்கு மட்டுமே யானைத் தந்தம் இருக்கிறது; யானை சாப்பிடுவதற்கு அது பயன்படுவதில்லை.)

நான் பிறரிடம் சொல்வதையெல்லாம் நடைமுறையில் செய்துவிட்டேன் என்றால், கன்றின் குளம்படிநீரைத் தாண்டுவது போன்று, இந்தப் பிறவிப் பெருங்கடலைக் கடந்துவிடுவேன். அதாவது நியமப்படி காரியங்களைச் செய்பவன் பசுக்கன்றின் குளம்படி பட்ட இடத்தில் ஏற்படும் பள்ளத்தில் தங்கும் நீரைக் கடப்பது போன்று, பிறவிப் பெருங்கடலை எளிதாகக் கடந்துவிடுவான். ஆனால் சொல்வது ஒன்று, செய்வது வேறொன்று என்று இருக்கும்போது உனது திருவடிநிழல் எனக்கு எப்படிக் கிடைக்கும்?

மயில் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கிறது. அதன் குரலும் அமுதம் போன்று

இனிமையாக இருக்கிறது. ஆனால் அதன் உணவோ விஷப் பாம்பாகும். எத்தகைய கொடுமை இது!

ரகுவீரா! யார் எல்லா உயிர்களிடமும் அன்பு செலுத்துபவராகவும், பொறுமையின்றியும், உன் தாமரைத் திருவடிகளில் பக்தி கொண்டவ ராகவும், திடபுத்தியுடையவராகவும், வேற்றுமை பாராட்டாதவராகவும் இருக்கிறார்களோ அத் தகையவர்களே உனக்குப் பிரியமானவர்கள்.

ரகுநாதா! என்னிடம் பெருங் குற்றங்கள் நிறைந்திருக்கின்றன. நரகத்தில் இருப்பதற்கு உரிய தகுதிதான் என்னிடம் இருக்கிறது. ஆயினும் கருணையின் இருப்பிடமே! உன் பெருமையை நினைத்து இந்தத் துளசிதாசன் மீது தயை காட்டுவாயாக.

* * *

இறைவன் திருவடிகள் மீது எனக்கு அன்பு இல்லை என்பதைத் தெரிந்துகொண்டேன். ஏனெனில், கனவில்கூட என் மனதில் புலனடக்கம் இல்லை.

ஸ்ரீராமரின் திருவடிகளில் அன்பு செலுத்துப வர்கள் எல்லாச் சுகபோகங்களையும் நோய் என்று அறிந்து விட்டுவிடுகிறார்கள். காமம் என்ற பாம்பு கடிக்கும்போது அவர்களுக்குச் சிற்றின்பம் என்ற விஷம் ஏறுவதில்லை. இவ்விதம் சிந்தித்துக் கொண்டிருக்கும் என் உள்ளம் குழப்பம் அடைந் திருக்கிறது. தினமும் புதிது புதிதாகப் பெருங் கவலைகள் என் மனதில் சேர்ந்துகொண்டிருக் கின்றன.

எப்பொழுது இருந்தாலும் ராமரின் கிருபை யினால்தான் துளசிதாசனின் துன்பங்கள் தூர விலகும். வேறு வழியும் இல்லை.

* * *

தலைவன் மீது எப்படிப் பழி சொல்வேன்? ஹே ஹரே! என் மனம் உன்மீது பக்தி செலுத்துவதை விட்டு, காமம், பேராசை இவற்றின் பின்னால் சுற்றிக்கொண்டிருக்கிறது.

மற்றவர்களால் நான் வணங்கப்படுவதில் எனக்கு மிகவும் விருப்பம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் உன்னை வணங்குவதில் எனக்கு மிகவும் குறைவான விருப்பமே இருக்கிறது.

நான் மற்றவர்களுக்கு அதிகமாக உபதேசம் தருகிறேன். ஆனால் அதே சமயம் மற்றவர் களுடைய நல்லுபதேசங்களைக் கேட்காத மூர்க் கனாக இருக்கிறேன்.

நான் மனம் விரும்பிச் செய்த பாவங்களை என் உள்ளத்தில் மறைத்து வைத்திருக்கிறேன். ஆனால் சாதுக்களின் சேர்க்கையால் செய்த சில நல்ல காரியங்களை மட்டும் உலகமெல்லாம் அறியும்படிச் செய்கிறேன்.

நிலத்தில் விழுந்து சிதறிய தானியத்தைப் பொறுக்குவது போன்று, நான் செய்திருக்கும் சில நற்காரியங்களையும் சேர்த்து வைத்திருக் கிறேன். ஆனால், தயாநிதியே! கர்வம் என்ற திருடன் அதையும் என் மனதிலிருந்து வெளியேற்றிவிடுகிறான். (நான் செய்த சில நற்செயல்களையும் தற்பெருமை காரணமாகப் பிறரிடம் சொல்லிச் சொல்லி அவற்றின் பலனை இழந்துவிடுகிறேன்.)

குரங்காட்டி குரங்கை ஆட்டிப் படைப்பது போலவே, பேராசை என் மனதை அறியாமை என்ற கயிற்றால் கட்டி ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது.

இவ்வளவுக்குப் பிறகும் பண்டிதர்களைப் போன்று உயர்ந்த வைராக்கிய தத்துவங்களைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கிறேன். அப்படி இருந்தும் வெட்கத்தை விட்டு என்னை உன் பக்தன் என்று சொல்லிக்கொள்கிறேன்.

ரகுநாதா! நீ தயை மிக்கவன். எனது இந்த வெட்கமற்ற தன்மையைப் பார்த்தே மகிழ்ச்சி யடைந்து, சம்சார பந்தத்திலிருந்து என்னை விடுதலைபெறச் செய்வாயாக. ○

---

பிறரது சுகத்தையும் செல்வத்தையும் கேள்வியுற்றும் பார்த்தும், தாழ்ந்த இயல்பு கொண்ட மக்கள் பொறுமைப்படுகிறார்கள். இதனால் பாக்கியம் அவர்களை விட்டுத் தூரத்தே ஓடிவிடுகிறது.

—துளசிதாசர்

# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1982 நவம்பர் & டிசம்பர் மாத நிகழ்ச்சிகள்

**தூய அன்னை ஸ்ரீசாரதாதேவியார் ஜயந்தி விழா**

7-12-82 செவ்வாய்க்கிழமை — ஜன்ம திதி: விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன காலை 5 மணி முதல் பகல் 11 மணி வரை நடைபெறும். மாலை வழிபாட்டிற்குப் பிறகு 'ஸ்ரீஅன்னையின் வாழ்வும் வாக்கும்' பற்றிய சொற்பொழிவுகள்.

12-12-82 ஞாயிறு — **ஸ்ரீசாரதாதேவியார் ஜயந்தி விழா பொதுக் கூட்டம்** (மாலை 5-30 மணிக்கு நடைபெறும்)

**மற்ற ஜயந்திகள்**

25-11-82 வியாழன் — சுவாமி பிரேமானந்த ஜயந்தி
11-12-82 சனி — சுவாமி சிவானந்த ஜயந்தி (மாலை 5-15க்குச் சொற்பொழிவு & ஆரதிக்குப் பிறகு ராமநாம சங்கீர்த்தனம்)
21-12-82 செவ்வாய் — சுவாமி சாரதானந்த ஜயந்தி
29-12-82 புதன் — சுவாமி துரியானந்த ஜயந்தி

நவம்பர் 11, 27 & டிசம்பர் 11, 26 (வைகுண்ட ஏகாதசி) ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழி பாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

**சத்சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (நவம்பர் 7, 21 & டிசம்பர் 5, 26)
ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (நவம்பர் 14, 28 & டிசம்பர் 19)

### சொற்பொழிவு—தமிழ்

1. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (நவம்பர் 7 & டிசம்பர் 5)
2. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (நவம்பர் 14 & டிசம்பர் 19)
3. இராமாயணம் — திரு ஆர். கோதண்டராமன் (நவம்பர் 21 & டிசம்பர் 26)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் ஞாயிற்றுக்கிழமைகளில் உரை நிகழ்த்துவார்.

பகல் 2-30 மணி முதல் மாலை 3-30 மணி வரை கல்லூரி மாணவர்களுக்கு 'இந்துமதம்' என்ற தலைப்பில் எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் சுவாமி ராகவேசானந்தர் உரை நிகழ்த்துவார்.

### வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம் — சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — தேவி மாஹாத்மியம் — சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் — ஆன்மிக வாழ்க்கை — சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் — பகவத்கீதை — பிரம்மசாரி சின்மயசைதன்யா
5. வெள்ளி — துளசி ராமாயணம் — சுவாமி விதபயானந்தர்
6. சனி — அத்யாத்ம ராமாயணம் — டி. ராமகிருஷ்ணன் (நவம்பர் 7 & டிசம்பர் 5 மட்டும்)

'வேறு சில நிகழ்ச்சிகள்' என்ற தலைப்பில் சென்னை மடத்தின் சார்பாக நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளும் நவம்பர், டிசம்பர் மாதங்களிலும் நடைபெறும்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்
ஸ்ரீராமகிருஷ்ண மடம்
சென்னை-600 004

தொலைபேசி: 71231

